



SWAMI RAMALINGAM



Late Patron
Subrahmanya Ayyar



Patron
Sir T. Sadasiva Ayyar



Patron Sir M. C. T.
Muthiah Chettiar





*(The Originator of Swami Ramalingam's Mission)*

A Ratna & Co )

# INTRODUCTION.

It was with much pleasure that I consented to write an introduction to the valuable book "Self-Realization" by Mr. T. Sambasivam. To seekers after truth and help in their efforts to attain self-realization, the summum bonum of existence according to Hindu ideals and belief the work is sure to afford considerable help. Saint Ramalingaswami is so well-known and his teachings command such reverence that any book which popularises his teachings is sure to be welcomed by those who are desirous of obtaining spiritual light and the merit of this book by Mr. T. Sambasivam is that it does in eleven lectures give a clear outline of the teachings of the saint and to popularise and bring home to the public the lofty thoughts embedded in the Tiru Arulpa.

To all spiritual development and attainment of true knowledge the aid of the Sat Guru is necessary and the book naturally begins with the appreciation of his greatness and the lofty nature of his teachings. Then follow in simple and truly pious language the way in which the ultimate truth may be realised. By process of simple though clear analysis the author has explained several philosophical and religious truths. Such truly great and pious devotees like Sir. T. Sadasivier and Brahmasree N. Arunachella Sastriar have spoken in high terms of the Spiritual Light in Arulpa and other

works of this series by the author and I have much pleasure in adding my humble tribute of appreciation. To the members of the Samajam and to other unselfish workers who without desire of personal gain or aggrandisement devote their lives to the propagation of the sacred truths propounded by our saints and sages the thanks of every true Hindu should be given and I trust that we shall never forget or cease to revere the lamps that God has lighted or the voices that God has toned for our guidance.

Sir. M. C. T. Muthiah Chettiar has with his usual generosity undertaken to publish the work and I am sure the public will appreciate his kindness.

MADRAS 7—8—'26 | SIR. C. V. KUMARASWAMI SASTRY, Kt., *Acting Chief Judge, High Court, Madras.*

I have known Mr. T. Sambasivam as a dear brother in our common Saintly Lord Ramalingaswamigal for several years past. My brother has, in my opinion, got the grace of his great Guru; and I have no doubt that the book "Self-Realization" which he wishes to introduce to the public with the good wishes of myself and others would enable many aspiring souls to tread the Path of Self-Realization, provided, of course, that their earnestness enables them to feel and share in some degree the insight and devotion of the author.

DIWAN BAHADUR. SIR. T. SADASIVIER, Kt.,
(KRISHNA DASA)
*Retired High Court Judge, and President, Hindu Religious Endowment Board.*

"Moryalaya"
Madras,
16—8—26

# முன்னுரை

ஸ்ரீமத் அகண்டபரிபூரண சச்சிதானந்த சுயம்பிரகாச சிவமாய் விளங்கும் திரு அருட்பிரகாச வள்ள லடியிணையை என்றுமறவா எனது ஆன்மநேய சகோதரரான ஸ்ரீமான் திரு. சாம்பசிவமுதலியார் அவர்கள் எழுதிய "ஆத்மானுபவம்" என்னும் ஓர் அரிய நூலின் சிறந்த கருத்துக்களை யான் வாசித்தகாலை அடைந்த நூற்பயன் சிறப்பைப் பின்வருமாறு கூறுதற் கிசைந்துளேன். இதில் அடங்கியுள்ள அறிவு செறிந்த நுண்ணிய அனுபவத்தை நோக்குங்கால் இந்நூலின்கண் விளங்கும் விஷய சூசிகையே ஆத்மவிசாரணை செயவதன் கிரமத்தை நன்கறிவிக்கிறதென்பது ஆத்மானுபவிகட்குத் தெற்றெனப் புலப்படும்.

இப் புத்தகத்தின் முதற்கட்டுரை, "சற்குரு விலக்கணம்." இதன முக்கிய கருத்தென்னவெனில் ஞானாசாரியரது சுத்தானுபவ விளக்கத்தின் பிரதிபிம்பமே சற்சீடன். இதை ஒருவர் ஊன்றி வாசிக்குங்கால் இந்நூலாசிரியரது விளக்கமெத்தகையதென ஒருவர் சொல்லாமலே விளங்கும்.

இரண்டாவது கட்டுரை, "கடவுள்." சற்குரு விலக்கணந்தெரிந்தாலன்றி மற்றெவ்வகை ஆற்றலானும் கடவுள் நிலை யித்தகையதென எளிதில் புலப்படா. இதன் முக்கிய குறிப்பென்ன வெனில் கடவுளென்பது அறிவின் தெளிவில் விளைந்த சுத்த இன்பம். இவ்வின்பம் நாமரூபங் கழன்ற விடத்தில் விளங்குமேயன்றி மற்று வாசாஞானத்தால் சித்திபெறு.

மூன்றாவது கட்டுரை, "தேகிதேகபாவ விளக்கம்" மேற் கூறிய கடவுளிலக்கணம் தெரிந்தவிடத்து தேகி யென்ப தென்ன? தேகமென்பதென்ன? இவற்றையெலா மொரு

வாறு தர்க்கக் கிரமத்துடன் எளிய இனிய நடையில் வாசிப் போர்க்குப் புலப்படும் வண்ணம் எழுதின தனிப்பெருங் கருணைக்கு யாமென்ன கைம்மாறளிக்கப் போகின்றனம்.

நான்காவது கட்டுரை, "சிதம்பர இரகசியம்." இப் பெரிய அனுபவப்பேற்றை உண்முக வனுபவத்தாலன்றி வேறெவ்வகையாலும் அறிய இயலாது. இதன் முக்கிய கருத்தென்னவெனில் வியாபக அறிவில் விளங்கும் நுண்ணிய சுத்த அனுபவம் வந்தவிடத்து இவ்வனுபவ இரகசியம் விளங்கும். இதை எனது ஆன்மநேயர் காருண்யமீக்கால் சிரமைபாராது எழுதிய நன்மைக்கு அறிவாளர்கள் ஒவ்வொருவரும் கடைமைப்பட்டுள்ளார்க ளென்பது என் மனத்தி லெழுந்த துணிபு.

ஐந்தாவது கட்டுரை, "ஆத்மானுபவம்." இப்பனுபவலி லடங்கியுள்ள தொவ்வொன்றும் ஆத்ம விசாரணையைப் பொருந்தினதாம்.

ஆறாவது கட்டுரை, "மனோலயம்." இதன் முக்கிய கருத்து எனது நண்பர் ஆக்கிய அருட்சோதி மலர்களைந் தும் ஒருவர் வாசித்தால் இவருடைய சாதகநிலை இன்னதென சொல்லாமலே விளங்கும்.

ஏழாவது கட்டுரை, "தானுயிருப்பது தவம் தனித் திருப்பது சமாதி." இதனது கருத்து தந்தமுறைப்பாலோ அல்லது பூர்வத்திற்செய்த புண்ணிய பலத்தாலோ இவ்வகை போற்றலனுபவம் லபிக்குமேயன்றிக் கல்வி கேள்விகளின் செருக்கு சிறிதும் பயன்படா.

எட்டாவது கட்டுரை, "சமாதி இலட்சணம்." இதை வாசிக்குங்கால் என்னுள்ளெழுந்த பேராவலுக்குக் கரையில. பிரகிருதி சம்பந்தமான தேகமும் அதனுள்ளீடாயுள்ள தேகியும் விசாரணையினால் நியதி களைந்து முடிவில் விளையும் சுகானுபவமே இரண்டறக் கலந்தலென்பதின் நியாயம் உபநிடதப் பிரமாணங்களாற் செவ்வனே விளங்கும்.

ஒன்பதாவது கட்டுரை. "இன்பம்" ஆத்தும விசாரணை யின் முடிவில் நிகழும் ஓர்வித சுடரொளி அனுபவம் பேரின் பமேயன்றி மற்றெவ்வகை ஆற்றலானு மெளிதிலறியா சுத் தானுபவத்தை எல்லோரு மெளிதிலறியும்படி இனிய தமி ழில் எழுதியிருக்கின்றது.

பத்தாவது கட்டுரை, "உண்மையொளியே சிவம்." இவ் வரிய அனுபவம் திரு அருட்பாவில் ஸ்ரீமத் இராமலிங்க ஸ்வாமிகள் ஏராளமாகப் பொலிவுடனும் மகிழ்வுடனும் மனங் குளிர எல்லோருஞ் சுலபமாக அறியும்படிப் பாடினர். இத் தகைச் செய்யுட்கட்குப் பொழிப்புரை யென்றே என்னறி வினுக்குப் புலப்படுகின்றது.

பதினோராவது கட்டுரை, "சொரூபமிலை." இதிலடங்கி யுள்ள ஒவ்வொன்றும் உண்மை அனுபவக் குறிப்புகளே. இதை வாசிக்கு மொவ்வொருவரும் உள்ளுணர்ந்து வாசிக்கு மளவில் இம்மூன்றுரையின் கருத்து நன்குபுலப் படுமென்று கருதுகிறேன். இதுநிற்க தொண்ணூற்றாறு தத்துவவிளக் கத்தையும் அதனுள்ளடங்கிய இரகசிய அனுபவங்களையும் நன்கு எல்லோர்க்கும் புலப்படுமாறு எழுதியிருக்கின்றது. யாவருக்கும் தத்துவ விஷயத்தை விசாரணை செய்வதற்கு இன்றியமையாத ஒரு சாதனமாயிருக்கும் என்பது சொல்லா மலே அமையும்.

இப்பெரியா ரனுபவம் எத்தகையதென்று தெரிந்த தமி ழுலகம் எல்லாம் வல்ல இறைவனை சதா இவ்வாசிரியர் செய்த பெருங்காரியத்திற்கு அருள்புரியும்படி பிரார்த்திப்பாராக.

நாகை - அருணாசல சாஸ்திரி,
*Lecturer, in Adwaita Philosophy,*
*The Madras Progressive Union School, G.T. and*
*Mallikeswarar Temple, Madras.*

# FOREWORD

In acknowledging the preceding appreciative remarks of my learned brethren, I am bound to say a few words in connection with the publication of this book which is a reproduction of the lectures delivered in my trips to South India with some of my friends, of whom my warm thanks are due to late Messrs. Thillai Palani Sivam, V. R. Balakrish na Mudaliar of Pondicherry, N. Ramaswami Iyer, P. S. Swaminatha Sastriar of Tanjore, Mahankali Subbiah of Nellore and others for their invaluable services rendered by their prompt reporting to the papers of the said lectures verbatim. To propagate the truths of Arulpa, it was found very difficult to give the light of publication without a constituted body which was originated by the humble self in 1908 in Madras in the name of Sree Ramalinga Swamigal Samarasa Sanmarga Samajam. Late Dr. Sir. S. Subrahmanya Iyer, Kt., C.I.E , nominated me as its President. I declined the honour done to me for, I wished to serve my Master Lord Ramalingam more in the capacity of a servant rather than to be a figure-head as President without service to my fellowmen. I have been able to conduct the affairs unostentatiously and feeding the poor ever since its start with its limited members.

Dr. Sir. S. Subrahmanya Iyer, Kt., C.I.E., was succeeded by Sir. T. Sadasivier, Kt., my beloved brother in the Lord Ramalinga Parasivam, who helped me much in the way of my publications of the grand noble truths embedded in Thiru Arutpa. It was he who conducted the First Anniversary on the day of Coronation in the Barracks Parade near Seven Wells, Madras. His chief ambition is to elevate the souls to be free from

caste and creed and to have one uniformity of love under the banner of Light and Truth which are represented as God.

It is needless for me to mention more about my revered brother since every one who has got real faith about the Ramalingaswamigal of Chidambaram, knows how much he worked for this Samajam.

Secondly, I have taken delight in adding a few words about Sir. C. V. Kumarasawami Sastriar Kt., who had the kindness to go through this humble work " Self-Realization " to frame an introduction in spite of his multifarious responsible works. He has, however, had the real love towards the propagation of my Master's sayings in the way of publications.

Thirdly, my learned friend Brahma Sree Nagai Arunachella Sastriar Avergal was able to read diving deep into this work and published his opinion to the readers a synopsis of each and every chapter in the book. I have to thank him once again for his cultured opinion especially in a subject of this kind.

In conclusion, I have to thank heartily Sir. M. C. T. Muthiah Chettiar, Kt., M.L.A., the Patron of the Samajam, whose kindness will be ever kept green in the minds of the people for his having undertaken the unselfish work with his usual generosity towards its publication. Several similar kinds of publications will be expected shortly.

If readers are benefited practically by this work every credit goes to My Master Swami Ramalingam. Suggestions of any kind towards the improvement of this book will be thankfully received.

T. SAMBASIVAM.

# விஷய சூசிகை

## பரம்பொருள் வணக்கம்

### ஐம்பத்தாறு சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

### திருச்சிற்றம்பலம்

ஒருமுதலி னுணர்வுதலை யாயசிவ மானநிறை
    ஓங்குநிலை யுண்மைப் பொருளே
உருவநிலை யருவநிலை யொருநிலை ஞானநிலை
    உண்மையே நிற்ப குருவே
உதயசுடர் உதயநிற் றருநிலைய பலகலையாய்
    உண்மைநிறை வான குருவே
ஓதுமதின் உணர்வுகொடு உலகத்தி லொளியாக
    உயர்வுநிலை யுற்ற தேவே

ஒப்புயர்வி லாததெது உண்மைநிறை வானசிவ
    ஓதுதற் கரிய பொருளே
உலகத்தி லொளியாக வெளியாக உண்மையால்
    உரிமைநிறை வான போதா
உயர்நிலையுஞ் சிவநிலையு மொன்றென வொன்றுபடா
    முதயகிரி யொத்த சுடரே
உத்தமர்க முன்னின்ற வுருவமுமி லுருவாகி
    ஒப்பரிய பெரிய பொருளாய்,

பருவமதில் பானுகி பகர்த்துணமுங் காணுகிப்
    பக்குவனி சேட மாகிப்
பகர்கின்ற மெய்ஞ்ஞான பதிபசுவை பாசமெனப்
    பார்க்குமிட மெங்கும் நிறைவாய்

பண்ணிலே முத்திருக் கும்பக்கு வத்தினிற்
பார்க்கின்ற வொன்றி னுருவே
பாராத வைதப்பார்த்து பண்பாயு கந்தவொரு
பற்றற்று வந்த குருவே
பாரதனில் நின்றசிவ யோகமுரு வாகவே
பகர்கின்ற வுயர்வா சகம்
பண்பிறைேடு பாடாமல் பாடியே மெய்ஞ்ஞான
பக்குவம திற்கா ணவே
பல்லோருஞ் சில்லோரும் பாடிபடுங் தெய்வமே
பார்த்தவிட மெங்கு முருவாய்
பக்தியே சிவமாகிச் சாந்தமே வடிவாகி
பார்க்கின்ற பெரிய பொருளாய்,

கருவறையை நீக்கியே காணசிவ மயமாகக்
காண்கின்ற பெரிய வெளியே
கற்பனையெ லாம்நீக்கிக் காட்டுமரு ளுருவான
காரணமு வந்த சோதி
காதல்சிவ பசுவாகிக் காரணமெ லாந்தாண்டிக்
கடவுளாய் நின்ற வுருவே
காதல்சிவ யோகிகட் கருவான வுருவமே
காட்சியே யொளிரு பதனில்
காணாத காட்சியைக் கண்டுற்ற வானந்த
கதிர்போல்வி ளங்கு மதியே
காட்டுமறி வூட்டுங்க லக்கமது தீர்க்கவருங்
கற்பனைக டந்த சோதி
காணுமது வாகியே தானுமது வாகநீ
காற்றற்று நின்ற விடமே
காணலா மருட்சோதி காணலாஞ் சிவசோதி
கரணங்க ளோய்ந்தய யர்ந்து,

அருகுணம றந்தநிலை யானபடி நின்றநிலை
    ஆனந்த மான நிலையே
அதிபகவ னென்றுரைத் தன்பர்சிவ வாக்கினில்
    அருமையாய்த் தோய்ந்த வறிவே
அலகில்சுடர் சோதியா யன்பாயு கந்தவர்க்
    கறிவாக வறிவி னூடே
ஐயமற நிற்கின்ற அண்ணலே மெய்யணையுகந்
    தாருமறி யாம லிங்கே
ஆண்டதே நின்கருணை ஆனதா லிதுவோம்பி
    ஆரவா ரித்து நின்றேன்
அருமையாய்த் தோன்றியே தோன்றும லொன்றிலே
    ஆனபடி யான தாகி
ஆண்டாண்டு தோறுமே ஆருயிர்க் குயிராகி
    அங்கிங்கு மெங்கு முளதாய்
அண்ணலே சிவயோகி யாய்வந்த வன்பனே
    அருட்சோதி தேவ தேவே. (1)

## குருமூர்த்தி நிலை

ஒன்றுமிலா வொன்றின் - உயர்பொருளுந் தானதுவாய்
நின்றநிலா வொன்றில் - நிகழுருவாய் சின்மயமாம்
எவ்வுயிரு மொன்று - மிலங்குகின்ற தற்பரமே
அவ்வுயிரில் நானு - யமர்ந்துள்ள விந்தைதனை
ஆரறிவா ரிங்கே - வற்புதசி ரம்பலவன்
பேரறிவாற் றோன்றும் - பெம்மான் பெருவெளியை
ஒன்றினு ளொன்று - யுலகெலாம் நிர்க்குணமாய்
அன்றே யறிவுருவா - யமர்ந்துள்ள வம்பலவன்
ஆரு மறியாத - அன்பான மெய்வீட்டில்
சோருந்தா கந்தூக்க - மூந்தொலைந்தே மூந்தாங்கு.

கண்ணுன வப்பனைக் - கைகுவித்து மெய்நெஞ்சே
வண்ணன் சிவயோகி - வள்ளற் பெருமையினை
மெய்யுணர்ந்து நின்றால் - மேலாம் பதவியதாம்
ஐயன்றன் போற்று - லற்புதமாச் சித்திகளும்
எண்ணிறந்த விந்தை - யிலேசதா முடியுமென
அண்ணல்சொல் வாக்கி - லன்பாக நின்றோர்க்குப்
பேரின்பம் பொங்கிப் - பெரிதாஞ் சிவமௌனம்
வேரிலாச் சோதி - வெளியா மொளிவிளங்கும்
கண்டார்க்கிங் கன்றேயுட் - காணலா மெய்வீடு
உண்ட பெரியசிவ - வுண்மைதனைச் செப்புதற்குச்
சொல்லெழா வின்பமெலாம் - சோர்வின்றிச் சோதனையில்
அல்லும் பகலுமிலா - தறிவாங் குருநிலையைப்
பேதமற்ற மெய்ஞ்ஞானி - பேசாப் பெருவெளியை
ஏதமற வேசொற்று - னெங்குருவாம் இராமலிங்கம்.

வேதாந்த சித்தாந்த சமரசாநுபவாநுக்ரக
வருட்குருவாகிய

## திருஞானசம்பந்த சுவாமிகள்மீது
## தோத்திரப்பா

உமையோ டுவந்த உருவாகி வந்த
 உமைபாலு முண்ட குருவே
உணர்வோடு கண்ட உலகாகி நின்ற
 உயர்காழி தன்னில் வதியும்
ஓர்நன்மை பெற்ற உலகெங்கு மெச்சு
 முயர்ஞான முற்ற வுருவாய்
உயர்பாத ரிதய உயர்ஞான சம்பந்
 தருளாகி நின்ற வரையே

ஊன்பா லிலாத உயர்ஞான பாலை
உணர்வோடு வுண்ட உணர்வே
உருவத்தை மாற்றி உணர்வாகிக் கூட்டு
முயர்ஞான தன்மை யடையும்

உலகெங்கும் போற்று குருநாத னாகி
யுயர்நாத தில்லை வாழும்
உறையற்ற பொன்னை உயிரோடு லாவு
முயர்வாகி நின்ற பதியே

சமயங் கடந்த சதுரான தன்மை
சமணத் திழுக்கைச் சாரா
சந்தத் தமிழ்க்குச் சதுரான மெய்யன்
சம்பந்த நின்னைப் போற்றும்

சைவப் பிழம்பாய் சான்றோர் மனத்திற்
சந்தான முற்ற தகையே
சாராத நின்னைச் சார்ந்தோர் தமக்குச்
சாகாத நிலையை யருள்வாய்

சௌபான நெறியை யறியாத வண்ணஞ்
சாகாத தன்மை யடையார்
சங்கற்ப மின்றிச் சைவாநு பூதி
சார்வார்க்கி ரங்குஞ் சத்தாய்

சாதித்துக் காட்டிச் சம்பாதி வடிவச்
சாந்தானு பூதி நிலையே
தாமே தமக்குத் தயவாகப் பெறற
தாளாண்மை கொண்ட பனையை

அமையாத உருவ வன்போ டுவந்து
ஆணை பனையைப் பெண்ணைய்
ஆளாக்கி சக்தி யருணைத நீயு
மன்போடி ரங்கி யென்னை

அகமாக நோக்கி அருளான தன்மை
ஆளாக்கி வைத்த பாவை
ஐயாவுன் பாணி யருட்சோதி பெற்று
மாளான தன்மை யறிவோம்

ஆனந்த மாக வமர்நீதி செங்கோல்
ஆளும் படிக்கு வைத்த
ஆழாழி நாளம் சீர்காழி தன்னில்
அமைப்போடு கந்த வன்பன்

அந்தநல் லூரி னடுவாகி நிற்கும்
அமர்நீதி யையன் அருளால்
அறிவோர் தமக்கு அன்பாகி வந்து
அறிவைப் புகட்டி தன்னுள்

இமைப்போத ருத இயல்பாக நின்ற
இனமான நல்ல தமிழை
இறையோ னடிக்கு அணியாக சாத்து
மினிப்பான நல்ல பண்ணை

எல்லோரு முய்ய எண்ணங் கொடுத்த
வெழில்வாய்ந்த ஞான மணியே
எள்ளற்கி லாத எழுத்தாளர் போற்று
மிசையேழுக் கொத்த பயனாய்

ஏகாந்தந் தன்னி லிடமாகக் கொண்ட
யிணையற்ற ஞான மணியே
ஈசன்ற னக்கு மகவாயு தித்த
இனமாஞ்சி வப்ர காச

மௌனவே யெடுத்த யெழில்ராம லிங்க
வருளால் மிகுந்த வருடாம்
இனமாகக் கண்ட இதயத் தமர்ந்த
எழில் ஞான சம்பந் தமே.

**திருவருட்பிரகாச வள்ளலடிமை திரு. சாம்பசிவம்.**

# ஆத்மானுபவம்

## 1. சற்குரு விலக்கணம்

### திருவாரூர்

இதன் முக்கிய குறிப்பென்னவெனில் ஒருவன் யோசிக்குமளவில் அவன் அறிவதாவது தான் யார்? தனக்கு இந்தப்பவம் எப்படி ஒழியும்? இதற்கு வேண்டிய சாதனை யாது? சாதனை குருவின்றி யுண்டாகுமா? அப்படி உண்டாகுமாயின் குரு என்பதற்குப் பொருளென்ன? கு-அஞ்ஞானத்தை, ரு-போக்குபவன். ஆகையால் சாத்திரங்கட்கும் மேம்பட்டவன். உடல் நாட்டந்துன்பமெனக் கருதுமுயர்குலமக்கள் தங்கள் பஞ்சேந்திரியச் சேட்டைகளை ஒழித்து உயிர்நாட்டமின்பமெனக் கைக்கொண்டும் சாத்திர வாராய்ச்சியோடு தத்தமனுபவக் காட்சியுறுமாறும் தாம் வாசித்தவளவிற் சிந்தித்தலும் அதனுடன் அப்பியசித்து வருதலுமான சாதனையேயாம்

கல்வி கேள்விகளில் மிக்க ஆராய்ச்சி யுடையவன் சாதனைக் குரியவனாவன். (கற்றோமெனுஞ் செருக்காற் காணோ மொருபயனுமுற்று நின்றோராதலின்) சாதனை யினால் மனச்சலன மொழித்து மாணாக்கனைத் தானின் றான் தனக்குப் பிறிதொன்றில்லை. தனக்குப் பிறிதாகத் தோன்றுவது கற்பனையேயாம். கற்பனை நீங்குதற்கு வேறுஉபாயமுண்டோவென்று யோசிக்குமளவில் கற்பனை தன்னிலே தோன்றித் தன்னிலே ஒழியும். இது குரு உபதேசத்தால் ஒருவாறு முடியும். மாணாக்கன் மனக் கவலையை ஒழித்து அன்னவனை இரண்டறக் கலப்பித்து மோனமாய் வைக்க அருள்வதே குருவிலக்கணம். ஞானா சாரியர் உபதேசஞ் சாதனைக்கு வழிகாட்டுவதுடன் நாம் இன்னானென அறிவதற்கு ஒரு துறையாம். எனெ னில் சிந்தனையற்றிருக்க வேண்டுமிடத்து சிந்தனைசெய் யுந் தொழிலையுடைய மனத்தில் நாமன்றிவேறுண்டோ என்கிற எண்ணம் இடையே வந்துதோன்றி சொரூப நிலையை அடைய வொட்டாமற் றடுக்கிறது. மோரில் மிதக்கும் வெண்ணெய் மோரில் சம்பந்தப்பட்டதாகத் தோன்றினும் அது வேறேதான். அதுபோல உலக விஷயத்தி லீடுபட்ட மனது தனது பஞ்சேந்திரியங் கட்குட்பட்டும் பிறகு தீர்மானத்தில் தானிவ்வாறென்று பரிசோதிக்கு மளவில் அதே மனதானது பழைய தன்மைகெட்டுப் பிறகு வேற்றுமை அடைவதுபோலும் "அறிவே யொளியாகி லன்னியமொன்றில்லை, யறிவே யிருளாகிலந்தோ — பிறிதுண்டா மெல்லா மனுபவமே யெங்கே தனைக்காணில் வல்லோரோ யேற்பர் மகிழ்ந்து."

இது நிற்க. பின் ஞானசாரியனது வார்த்தையைக் கேட்ட வுடனெத்தகையனெனில் கடாஞ்சொரியுங் கரி

யின் கனவிலுதிக்குஞ் செயற்றோன்றுமாயின் தனக்கி
யற்கையாயுள்ள வீரம்போய்த் தனது மதத்தையொழிப்
பதுபோல சீடனது அகங்காரங்குன்றி உண்மையான
போதத்தால் நிட்டைகூடிச் சிவத்திலதீதப்படுஞ் சிவராஜ
சிங்கமே சீடனாவன். இந்நற்சீடனருள் வசத்தாலே கட்
டுண்டு சாந்தம், ஈகை, தயை அன்பாகிய குணத்தின்
மிகுதியாற் றனதனுபவத்தில் நிகழ்ந்த பேராற்றலைத்
தாமடைவதன்றிப் பிறரையும் தன் சுவானுபூதியி
லுதித்த கருத்துக்கிசைந்த பண்கள் மூலமாகவுள்ள
நமது திருவாசகம் திருவருட்பா வியற்றிய ஆசாரிய சமய
குரவர்களே சற்குரு விலக்கணமமைந்தவர்க ளென்பது
திண்ணம். சற்குருவென்றவிருளை யொழிக்கும் பிர
காசம். இஃது ஒரு காலத்துந் தோன்றாதபொருள்
தோன்றினது எதன்பால்?

அப்பிரகாசத்தி னிடமன்றோ! இதற்கு முக்கிய
காரணத்தை நோக்குமிடத்து இச்சையு மிச்சைக் குகந்த
மனமும் மனத்துக்குகந்த நாட்டமு மின்னாட்டமே பொரு
ளாகவு மிந்நாட்டத்திற்கு முதலாயுள்ள மன சங்கற்
பமே இருட்டென்று மிதையெல்லாம் ஒழிக்கும் பதார்த்
தமாகிய அகல், திரி, எண்ணெய் எனமூன்றுந் தங்கள்
தன்மை கெட்டொன்றாகிய சுடர் வெளியே சற்குருவிலக்
கணமென்றுங் கூறுவர். சற்குருவென்னும் பொருள் எந்
தக் காலத்து மேம்பாட்டை அடையுமென்றால், சற்சீடன்
வாய்ந்த காலத்தே. சற்சீடனென்பவன் குரு சொல்லிய
சொல்லில் நாட்டமுற்று, சற்குருவையே தெய்வமெனக்
கொள்பவனெவனோ அவனே சற்சீடனிலக்கணம் வாய்ந்
தவன். கண்ணுடைய மாந்தரெல்லாம் ஊனக்கண்ணைப்
பெற்று உயிர்நாட்டமில்லா உல்லாசத்தில் வாழ்ந்திருப்ப

வர்களல்லர். ஊனக்கண்ணென்பது நாசமடையும் பொருளைப்பார்த்துத் தானும் நாசமடைவதேயாம். இங்ஙனம் கண்ணுடைய மாந்தரென்பது இலட்சியம் வாய்ந்த சற்குருவையே கண்ணுயமைத்து உள்ளுணர்ந்து ஆராய்ச்சி செய்யப்புகுவோ ரெவரோ அவரே சற்குருவென்பர். அவர் சகல சாத்திர அனுபவராயிருக்க வேண்டியதவசியமில்லை. தன் சாதனையுழைப்பால் எதார்த்த நிலையையறிந்து எங்குமுள்ள விசேஷ என்னுள்ளிருக்கிறதென்கிற திடவைராக்கியம் பெற்றுத் தானநுபவிக்கு பானந்தத்தை யாவர்க்கும் பங்கிட்டுக் கொடுக்க மனமுவந்து அருள் வாக்கால் மொழியும் வார்த்தைகளே சற்குரு உபதேசமாம். உபதேசமென்பது உயிர்நிலைகாட்டு முண்மையொளி. இவ்வொளியே சுவாநுபூதியர் சற்குருவென்று நிச்சயித்திருக்கிறார்கள். இதுவுமின்றி சற்குரு தரிசனம் இக்காலத்துக் கிடைப்பது மிகவரிது, ஏனெனில் கல்லாத கல்வியிலே கேளாத கேள்வியிலே தலைப்படாத தற்கால ஜனங்கள் பட்டஞ்சட்டம் பெற்ற படிப்பைப் படித்து நாய்போலங்கு மிங்குமோடி வயிற்றுக்கிரைதேடி இறுமாப்பு வாய்ந்திருப்பவர் கணக்கிலர். இவ்வித இறுமாப்பே பிறப்புக்குக் காரணமாயும் இவ்வித நாட்டமிலா நாளே நமனுடைய நாளாகவும் நல்லோர் புல்லோரென்னுந் தன்மை நன்கறியாரெவ்வாறு சற்குரு விலக்கணம் பெற்று சற்சீடராவர். பிறப்பை ஒழிக்கும் பிஞ்ஞகன் பெருமையை அடையவருள் வடிவாயுமன்புருவாயு மெழுந்தருளிய நமது ஆன்மப்பிரகாசம் பெற்றவருட் பெருஞ்சோதித் தந்தையரே அருட்குருவென்றும் அருட்சோதி சிவமென்றுஞ் சதானந்தம் பெற்ற சற்குரு சுவாமியென்றுங் கூறப்போந்தேன்.



# 2. கடவுள்

## திருவொற்றியூர்

கடவுள் என்பது காலங்கடந்தது. கடவுள் என்னுஞ் சொல் கற்பனையேயன்றிப் பிறிதென்னை? இத்தகைய கற்பனை உலகத்தின்கண் பற்பலவிதமாய்ப் பல்லோருஞ் சொல்லக்கேட்டு மிருக்கிறோம். ஆனால் இதன் பொருள் என்னவென்று ஆராய்ச்சி செய்யப்புகுவோம். கடவுள் முதலில் ஆணா? அல்லது பெண்ணா? மற்றென்னை? ஆணும் பெண்ணுமல்லவென்று சொல்லுமிடத்து மற்றெத்தகையதாகக் கூறுவது? கூறமுடியாததே யாம். இது நிற்க, கூறமுடியாததை எங்ஙனம் உணர்ந்து கொள்வது? அவ்வவர்கள் அனுபவவாயிலாகத் தெரிந்துணர முடியுமேயன்றி மற்றெவ்வாற்றாலும் இயலாததே. அறுபூதிய ருள்ளகத்தே கடந்து நின்ற வியாபகவுணர்ச்சியே கடவுள். நாமெல்லாரும் இன்றையதின மொருங்கே சேர்ந்த இவ்வீடு யாரோ ஒருவனாற் கட்டப்பட்டிருக்க வேண்டுமல்லவா? இக்கட்டடத்திற்கு முதற்காரணமாயுள்ள தெதுவென நோக்குமிடத்து மனிதனல்ல இச்சையென்றே தீர்மானிக்கப்படும். இச்சைக்கு முதற்காரணத்தை நோக்குங்கால் முடிவிலே சூன்னியமாகவும்

சூட்சுமமாகவுந் தோன்றுகிறது. இது நினைப்புக்கும் மறப்புக்கும் மத்தியிலுள்ளது. நினைப்பையே பிறப் பென்றும் மறப்பையே இறப்பென்றுஞ் சுத்த சுவானு பூதியர்கள் கூறியுளார். இந்த நடுநிலையே நினைப்பு பிறந்த விடமென்றுஞ் சொல்வர். இவ்வுலகின்கண் தோன்றும் அகண்டாகாசம் சித்துருவாய்த் தோற்றல் மாத்திர மாகக் காணப்படுவதன்றி இவ்வகையென நிரூபிப்ப தற்கும் எடுத்துக் காட்டுவதற்கும் இயலாது. இது போன்ற சிதாகாசம் ஒவ்வோரனுபூதி மான்கட்குப் புலப் படுமே யன்றி ஏனைய உழைப்பிலா உலுத்தர்க்குச் சொல் மாத்திரமாகவும் சாத்திரக் கத்தலாகவுமே முடியுமேயன்றி வேறெவ்விதம் புலப்படும்? இது கடவுளை அறியும் வழி யல்ல. வானத்தின்கண் விளங்கும் மேகங்கள் ஒன்றோ டொன்று நெருங்கின காலத்து உண்டான மேகக்கர்ச்சனை இடியென்றும், அதிற்றோன்றும் வெளிச்சம் மின்னலென் றும் வானசாத்திரிகள் கணித்திருப்பது போலவே சுத்த சிவ நிலைவாய்ந்த அருட் பிரகாசத் தன்மை பெற்ற அனு பவ முதிர்ச்சியுடையோர் சிதாகாசத்தில் நினைப்பும் மறப் புமற்று உய்வர். நினைப்பு மறப்புக்காதாரம் காற்று; காற் றென்பது வாசி. இங்ஙனம் சிதாகாசமான மேகத்தில் முழங்கும் இடி தம்மமெனவும், அதிலுறும் மின்னல் நினைப்பெனவும், இதையே உயிர்நிலை யென்றுஞ் சொல் வர். வாழும் பூமிமுதல் அண்டாண்ட சராசரங்களெல் லாவற்றிலும் இப்பிரகாசம் அணுத்திரளாகக் காணப் படுகிறது. மற்றும் இவ்வுலகத்தில் ஒவ்வொரு சிற்ற ணுக்களுக்குக் காரணவுற்பத்தியாயுள்ள அகண்டாகார ஸ்வயம் பிரகாசமாய் விளங்குங் ககன வட்டமுடைய கதிரவன் கதிரொளி இதில் ஒரு பகுதியேயாம். கதிர வன் ஒளியின்றி ஒரு சிறிய பொருளும் உலகின்கண்

உயிர்பெற்று வாழுவனவாமா. காணக்கூடிய பதார்த்தங்கள் யாவற்றிலுஞ் சிறிதுங் குறைவின்றிக் கதிரொளி நிறைந்திருக்கிறது. நினைப்பும் மறப்பும் தீர்க்க தீர்மானத்தில் ஒரு படித்தரம். நினைப்புமறப்புக்கும் ஸ்தலமொன்றே இத்தலமே துரியமென்றும் அறிஞர் கூறுவர். நாசியினிரு துவாரவாயிலில் நடமாடிக்கொண்டிருக்கும் இடைகலைபிங்கலை ஒருகாலத்து இடைகலையே நடமாடுவதும் மற்றொருகாலத்து பிங்கலையே நடமாடுவதும் ஏககாலத்தி லிரண்டும் விவகாரஞ்செய்யாமல் ஒன்றோடொன்று பின்தொடர்ந்தேயிருக்கும். இதன் முடிவில் விளங்குமோர் சிற்றொளி துரிய விளக்கென்றுஞ் சுயம்பிரகாசமென்றுஞ் சுவாநுபூதியர் கூறியுளார். எல்லா மறிந்த அறிஞர் சங்கற்பங்கலந்த நாமரூபங்கள் நீங்கி நான் அறிவாயிருக்கிறேன் என்கிற பாவனை நித்யவறிவிறந்த சுகத்தை அறியவந்தது பாவம். எப்போது மறிவாகாரமாயிருக்கிறேனென்கிற அந்த நினைவையும் மறந்தபோது தோன்றும் பேரொளியே கடவுள்.

சிறிதாக விளங்கு மொளியே சாதாரண வழக்கத்தில் அறிவென நாமம்பூண்டு வருவதைத் தெரிந்திருக்கிறோம். இத்தகைய அறிவே கேவல அறிவு. இதனையே சிற்றறி வென்றுஞ் சொல்வர். இவ்வறிவு இருவகைத்து. கற்பனை நிறைந்துள்ள உலகினகண் வியாபித்து விவகாரஞ் செய்யுமறிவொன்று. (சிற்றறிவு.) கற்பனை கடந்த கற்பனா தீதமாகிய சொல்லுக் கடங்கா சுகாதீதத்தில விளங்குவ தொன்று. (பேரறிவு) சுருதி யுக்தி வாயிலாகச் சொல்லப்பட்டுள்ள சரியை, கிரியை, யோக முதற் சொல்லிப்போந்த கற்பனைக் கடங்கியுள்ள அறிவே பினனர் ஞானமாய் கற்பனாதீதமாகிய அறிவாம். மேற்சொன்ன

உலக விவகார அறிவு இச்சித்தற் றொழிலையுடைய வகை களில் நாடி அஷ்டமாசித்திகளைப் பெற்றும் பிறப்புக் கிடமாயுள்ள துன்பமாகிய சாகரத்தில் வாழுந் தொழிலே யுடையது. மற்ற விவகாரத்திற் சிக்கா அறிவு சிதாகாசச் சிற்பரத்திலே சிந்தனையற்று "பிறப்பிலி" என்னும் பெரும்பேற்றை அடைவதுடன் பின்னுங்கன்றன் பெருமை யுடைய தாக்கற்ற பரிபூரண வெளியில் நிலைத்தலாம் இறவா நிலையையடைகிறது. சங்கற்ப விகற்பம் நீங்கி நின்ற இவ்வனுபவானந்த வியாபகசொரூபமே கடவுள் என்பர். இதற்குச் சாட்சி,

> ஒழிந்தேன் பிறப்பை யுறவென்னும் பாசங்
> கழிந்தேன் கடவுளு நானுமொன் றனே
> யழிந்தாங் கினிவரு மாக்கமும் வேண்டேன்
> செழுஞ் சால்புடைய சிவனைக் கண்டேனே.
>
> — திருமந்திரம்

இத்தகைப் பெரியார் உலகொழிந்த காலத்து தேகாபி மானத்தை நீத்த அவர் மனது சத்துவ சொரூபமாத லின் அதனுடைய மற்றிரண்டு குணங்களுங் கெட்டு நிரதிசய சமாதியைப் பூண்டு சதாகாலமும் தூங்காமற் றூங்கிச் சுகாரம்பப் பெருவெளியில் சித்துருவாய் விபு வாய் நின்ற ஒன்றின் வடிவமாகவே உய்வர்.

மனமிறந்த சுகானந்தத் தூக்கம் பூரணநிலை. பூரண மென்னுஞ் சொற்கு நிறைவு என்னும் பொருளுளதாத லானும், கீழ்மேல் பக்கம் நடு என்னுஞ் சொற்கடந்ததா னும், எல்லா இச்சைகளும் நீங்கிக் குருமுக மூன்முக வனுபவ ஆராய்ச்சியின் முதிர்ச்சியி னுண்மையை அடைந் தவனெவனோ அவனே தீவிரதரபக்குவத்தில் தன்னைத்

தானின்றனை அறிதலோடும், அறிவுக்கறிவாய் நின்ற சுகாவேசத்தால் திருசியம் சத்தமென்று மிரண்டையும் நீங்கி நிவாத தீபம்போன்ற நிர்ச்சிந்தையனாய் நின்மலனாய் நித்திய சொரூபம்பெற்று அருட்சரீர மடைதலுடன் அருளானந்தப் பரவசனாகி உடம்பினைப்பற்றிய பசிதாக முதலியவற்றி லணுவளவும் சிந்தனையற்றுச் செய்கை யற்று நினைப்பு மறப்புமற்றுத் தன்னந்தனியே ஆனந்த நித்திரையில் எல்லையிலா அருள்வெளியாம் பரநாதவெளி யில் ஒடுங்கி, திருக்கு திருட்டியின்றித் தில்லைபாடியான உயிர்காட்ட உண்மையொளி வெளியில் உலகெலாமுணர்ந் தோதத்தக்க தன்மைபெற்று எல்லா உயிர்கட்கும் தான டைந்த பேராற்றலை அன்பு நிறைந்த அருட்பா மூல மாகவும், இத்தகைய பாசுரங்களி லாங்காங்கு சுரக் கும் இன்னமுதை அன்போ டுட்டுணித்து அருள் நிலை காட்டி அருட்குருவாய்த் தோன்றும் குரு இராமலிங் கமே குவலயத்தில் தோன்றாத் துணையாய் ஒவ்வோ ரிதயத்திலு மின்பம் நிறைந்த கடவுளையாம்.

சித்தம் நிருவிகற்பஞ் சேர்ந்தால் உடல்தீபம்
வைத்த கற்பூரம் போல்வயங்கும் பராபரமே.

இத்தகையரான பெரியாரே அருள்விளக்க முடையோர். இவ்வருள் விளக்கம் சகநாட்ட மிழந்தவனெவனோ அவனுக்கே உண்டாகும்.

ஏனையோர்க்கு இந்தச் சன்மத்தில் விளங்குவது மஹா துர்லபம். எத்தனை யெத்தனை நீத்தாயகிலத் தைப்பரஞ்சுடரா யெரிக்குஞ்சோதி—யத்தனை யத்தனை தோன்ற மெங்காண் மட்டனைத்தும் விடாயங் காண்மட் டுங் — தத்துவமாம் பொருளெய்தா சகலமும் போனாற்

சேடந்தானுஞ்சித்தந்—தொத்தற வேற்றுமையெல்லாம் போகாதேற் சமமான சோதிதோன்ற. (ஞானவாசிட்டம்) அத்துவிதானுபவத்திலும், இஃதேயன்றிச் சிவ ஞானப்பிரகாச வெண்பாவிலும் விளைந்த பெரும் பயனைக் கவனிப்பீராக—சிறிதறியப் பட்டதாய்ச் சிறிதறியப் படாததாய் செகத்தில் என்னுல், அறியப் பட்டனவெல்லாம் அன்றிருவகையின் அனுபவத்தினறிவதாலே, முறிவிலா முன்னறிவிப்போது மினிமேலு மென்று முக்காலத்து—நெறியறியு மறிவுரு நானே சகல சாட்சியென நிகழ்த்தலாமே—கைபிலுறு புண்ணுக்குக் கண்ணாடிவேண்டுமோ, மெய்புணர்விலுண்டோ விபரீத—மையறிவு—மோரறிவாய் போனவிடத்தே தாகோகோ மும்முதலுஞ், சோராம னிற்குமோ சொல்—ஓசையா யெல்லாமானாய் நீயென்ற பின்னர்ப், பேசவிரண்டுண்டோ பேச்சைவா—ஆசையெல்லா—மற்றவிட முத்திநில்லையோ வஃதெல்லா, முற்றவிட முத்திநில்லையோ.

(குணங்குடி மஸ்தான் சுவாமி பாடல்) ஒன்றை இவ்விடம் நாமெடுத்துக் கொண்ட கருத்தை ஒருவாறு விளக்கவும் எளியேன் எடுத்துச்சொல்வேன்.

எண்சாணுயரத்திருக்கும் பனையினிறக்கி யுண்ணும் பஞ்சாக்கரமெனும் பாரியவாளினைப் பாய்ந்தெடுத்துத்—தஞ்சாவூரானு மகாராஜன் பாதந்தனைப் பணிந்தால், கெஞ்சாக் குணங்குடி கொள்வாயிது புத்திகேணெஞ்சமே. நானங்காய் நீயிங்காய் நாட்டமற வைத்ததற்பின, நானெங்கே நீயெங்கே நாதனே—வானெங்கு, மொன்றாகி நின்ற வுணர்வு நீயுன்னறிவி, நன்றாகத் தோன்றுசுக நாம். (சிவபோகசாரம்) சொரூப சமாதிககண் மின்மினி வொளி போற் தற்பிரகாசம் வெளிப்படும். காணுமொவ்வொரு

காட்சியுஞ் சிவவியாபகமாகவுங் காண்கிறான். காண்பானே காட்சியென்கிற பூரணவடிவமே உபசாந்த ஞான நிலை என்பர். நிருவிகற்ப சமாதிவாயிலாகத் தத்துவ ஞானஞ் சித்திக்கும். காரண சரீரமான அஞ்ஞானம் நசிக்கும். இக்காலத்தில் உண்டாகும் பயன் ஜீவன் முத்தியாம். இதுவே நாளடைவில் விதேக முத்திக்குக் காரணமாகும். இம் முடிவான ஒப்பற்ற நிலையை அடைவதற்கு விருப்பமுடையவன் அப்ரமேய சொரூபமாயுள்ள ஆத்துமாவை அகண்டாகார சொரூப விருத்திவாயிலாகச் சேர்த்துப் பின்னர் விஷயவாசனையில் அலையாமல் ஐக்யமான சிதானந்தசொரூபம் பெற்று, சிற்பிரகாச வீட்டில் வாழ்பவனெவனோ அவனே சிதம்பர இரகசிய நுண்பொருளை அறியுஞ் சக்தியைப்பெறுவன்.

"அத்த னிருப்பிடத்தை யாராய்ந்து பார்த்துவிதஞ்
செத்த சவம்போற் றிரிவதினி யெக்காலம்.

இத்தகைச் செய்யுளி லாழ்ந்த கருத்தை அறிந்து நின்றாலறிவாகார வியாபகத்தன்மை அடைவதற்கு யாதுதடை? ஆனந்தாதீதமான சர்வேஸ்வர சத்திய தத்துவம் பெற்றுச் சதானந்த நிலையடைவதற்குச் சத்தியமான பின்வரும் நுண்ணிய கருத்தால் சந்தேக விபரீத அஞ்ஞானமென்று சொல்லப்பட்ட கஷ்டம் நீங்கிக் கடவுளிதென்று அறியப் பின்வருஞ் செய்யுள் பயன்படுமென்று நம்புகிறேன்.

"காற்றுருவோ கனலுருவோ கடவுளுரு வென்பார்
காற்றுருவுங் கனலுருவுங் கண்ணொப்பீ ரென்றால்
வேற்றுருவே புகல்வாரை வேறென்றால் மறுத்தால்
விழித்துவிழித் தெம்போல்வார் மிகவுமருள் கின்றார்

தோற்றுமந்தத் தத்துவமுந் தோற்றாத் தத்துவமுந்
துரிசாக வலைகடந்த சுகசொரூப மாகி
மாற்றமன வுணர்வுசெல்லாத் தலத்தாமெம் பெருமான்
வடிவுரைக்க வல்லவரார் வழுத்தா யென்றோழி."

"கற்பனை முழுவதுங்கடந் தவருளத்தே கலந்து
கொண்டி னிக்கின்ற கற்பகக் கனியே
யற்பனை யாண்டுகொண் டறிவளித் தழியா
அருணிலை தனிலுற வருளிய வமுதே
பற்பல வுலகமும் வியப்பவென் றனக்கே
பதமலர் முடிமிசைப் பதித்தமெய்ப் பதியே
தற்பர பரம்பர சிதம்பர நிதியே
தனிநட ராஜவென் சற்குரு மணியே."

இங்ஙனம் எல்லாஞ் சொல்லிய பின்னர் நாமாய் விளங்கும் நல்லருட் பூரணவியாபகமே நாம் பெறுநிலை. இந்நன்னிலை வியாபகஞ் சதாசித்ரத்தை அசைவின்றி அகண்டாகார உள்முக நீட்சண்யத்தால் பசையற வுலர்த்திப் பரசிவ வியாபகத்தில் விளங்கும் துரியக்காட்சியே சிவதுரியமென்றும் ஆன்மவெளியென்றும் அருட்பெருஞ்சோதி யென்றுஞ் சுத்த சுவாநுபூதியர் கூறுவர். எல்லாவித அனுபவமுடிவில் விளங்குவ தெதுவோ அதுவே சுயம்பிரகாசமென்றும் இது வாய்ந்த காலத்துப் பசித்தாக மின்மையை உண்டுபண்ணி உலகெனுங் கற்பனையை நீக்கி உன்னத நிலையாகிய உதயகிரியின் சுடர் வியாபகமாய்ச் சிறிது சிறிதாகத் தேகங்குன்றிச் சின்மாத்திர வடிவமான ஆன்மா அருள் தரிசனவாயிலாக அருட்பிரகாச வடிவாகிய நித்தியானந்தச் சொரூபத்தைப்பெற்று அன்பரிதயத்தையே கோயிற் கொண்ட

நம்பெருமான் நல்லியல் வாய்ந்த நற்குரு இராமலிங்கமே நற்கடவுளாம்.

"சொல்லிலுஞ் சொல்லின் முடிவிலும்
வேதச் சுருதியிலும்
அல்லிலு மாசற்ற வாகாயந்
தன்னிலு மாய்ந்துவிட்டோ
ரில்லிலு மன்ப ரிடத்திலு
மீசனிருக்கு மிடங்
கல்லிலுஞ் செம்பிலுமோ விருப்பா
னெங்கள் கண்ணுதலே."

— பட்டினத்தார்

# 3. தேகி தேகபாவ விளக்கம்



## தஞ்சாவூர்

அகண்ட சொரூபமாய் விளங்கு மறிவே உலகத்தை விளக்குமொளி. இத்தகைய ஒளி விளங்குங் காலே உலக மென்பது மித்தையெனப்படும். மித்தையென்பது இல்லா ததை வருவிக்குமிடத்தே கற்பனையென்றுஞ் சொல்வர். இத்தகைத்தாகிய கற்பனைக் கிடமாகிய தேகபாவ மென் பது பஞ்ச பூதங்களாலாக்கப்பட்டு இறுதியில் தத்தமாத் திரை குறைந்த விடத்து கற்பனையாகிய தேகமெனுஞ் சொல்லிறந்து பிறகு சூன்யவடிவாதலெதுவோ அதுவே யாம். இது பின்னர் நாமரூப மற்றதாகவே, மாயா காரிய மாகிய அன்னமயமுதல் ஆனந்தமயமீறாகச் சொல்லப் பட்ட பஞ்சகோசங்களும் இவற்றைக் கடந்திருந்த சத் தாதியாகிய புலன்களும் நீங்கும். அவை நீங்கவே அவை களை மருவாநின்ற பொறி அந்தக்கரண மிதற்கியைந்த வித்தியா தத்துவங்கணீங்கும். இவற்றைப் பிரயோகம் செய்யுஞ் சுத்த தத்துவங்களைந்து நீங்கி நீங்காமலும் பந் தித்து நின்ற தத்துவ முப்பத்தாறின் முடிவாகிய ஏதோ ஒன்றை சுவாநுபூதியர்கள் கைக்கொண்ட பலனே தேகியென்றும் அதாவது தேகத்தைக்காத்த இச்சாபி

மானமே உயிராகவும் இதை இச்சித்த முப்பத்தாறு தத்துவத்திற் கிடாயுள்ளதெதுவோ அதுவே ஒளியென்றும் ஆன்மப் பிரகாசமென்றும் சொல்லுவர்.

உடல்விட் டுயிர் நீங்குங்கால் யாதோர் அவாத் தோன்றி அவ்வவாவின் வழித்தாய்ச் சென்று உயிர் பிறத்தலின் அவா பிறவிக்கு வித்தெனப்பட்டது.

"அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து."

— திருக்குறள்

இவ்வண்ணம் இச்சை எவ்விதத்தன்பாலுடையது? தேகத்தின் தன்மை இன்றென்றால் தேகியின் தன்மையாக முடியும். இப்பொழுது தேகி யென்பது இச்சையே என்பதாம்.

"இச்சாம் ஜெகத்" இச்சையென்பது நினைவில் விளைந்து நினைவிலிறந்து அதாவது கிரியைபாவனை ஒழித்துத் திருக்குவடிவமான தன்மயமாகிய சிதாகாச வடிவத்திலழுந்தி யிருத்தலே தேகபாவத்தை நீக்கின இடமாகும். இத்தலமே துரியமென்றும் சிவபோத பிறந்தவிடமென்றும் பிறவியை ஒழித்தவிடமென்றும் பேதாபேத நிலையென்றும் பெரியோர் கூறியுளர்.

ஒருவன் நான் சடத்தன்மை பெற்றிருக்கிறேனென்ற எண்ணம் நழுவும் பரியந்தம் சித்துத்தன்மை அவனுக்கு விளங்கவே விளங்கா. ஏனெனில் எண்ணமே பிறப்புக் கிடமாதலின் எண்ணத்தை ஒழிக்கு மெழுச்சியே அருள் தரிசனம், பரைதரிசன மென்றுஞ் சொல்லப்படும். ஒரு குயவன் என்பவன் மனிதனே ஆனால் அவன் செய்யுந் தொழிலைப்பற்றியே அவனுக்கு அந்தப்

பெயர் வாய்த்ததுபோலத் தொழிலினாலேயென்றி ஏனைய வற்றால் ஒருவனுக்கு ஒரு பெயர் வெளிப்படா. ஆனால் முன்னமேயிருந்த பிருதிவி குயவனிச்சையினால் பிரு திவி ரூபமாறி பிரகு தண்டசக்கரங்களினால் சட்டி பானை கூசா முதலியவைக ளேற்பட்டது மண்ரூபம் அன்றோ? மனத்தி னெழுச்சியினாலுருவாகி இறுதியில் எப்படி மண்ணென நிரூபிக்கப்படுமோ அதுபோலவே தேகமென்பது இச்சாஞானக் கிரியையால் விவகாரப் பட்டு இச்சையொழிந்த விடத்தே தேகபாவம் நீங்கித் தேகிபாவமெனப் பேர்படும்.

குடத்தை இறுதியிலெப்படி மண்ணென நிரூபிக் கப்பட்டதோ அதுபோல இதனுள் இருந்தே இவ்வுடம் பையும் மற்றுமுள்ளனவாய கருவிகளையும் மாயா மல மென்றும் உனக்கன்னிய மென்றும் கண்டு நீங்கிச் சுத்த தத்துவத்தின் முடிவில் நின்று தன்னை அருளால் கண்டு அவ்வருளில் அசைவற இருந்தவிடமே மோட் சம். போதத்துக்கு மறைப்பு செய்யுமாணவமும் மயக் கத்தைச்செய்யு மாயையுஞ் சலன விகாரங்களைச் செய்யுங் கன்மமும் ஆன்மதரிசனத்தை மறைக்கும் திரைகளாம். திரிமலங்கள் நீங்கி நின்றவிடமே இருள் கடிந்தவிடம். சுத்தானுபவந் தோய்ந்தழுந்திப் பரவனுவாய்க் கரைந்து தேய்ந்து தேய்ந்தொன்றாய்ச் சிவான்மாவறியாவிடத்து சுயம்பிரகாசமாய் விளங்குகின்ற சிவப்பாழ் பரப்பாழ் சிவப்பாழ் ஆகிய முப்பாழுங் கடந்தவிடமே காண் பானாகிய சிதாபாசன் ஞாதுருவெனவும் காட்சியாகிய மேற்படி மனமாதிகள் ஞானமெனவும் காணப்படு பொரு ளாகிய தேகேந்திரியங்களனைத்தும் ஞேயமெனக்கொண்ட சொரூபானுபூதியர் சொரூபசமாதிக்கண் சுடர்காட்டக்

கண்டகண்போல அருளால் தன்னையறிந்த விடம். இவ் விடமே தேகியென்னும் பேரிழந்து அருட்பிரகாசத் தால் இருள் நீங்கி அப்பிரகாசத்தைக் கண்ட காட்சி அதன்வயத்தாய் அவ்வொளியில் ஏகபாவமாய்க் கலந்து நாம்தேகி நாம்தேகி யென்னும் வாஞ்சையற்று நிற்பதே நானிறந்த விடமென்றும், பிறவியை ஒழித்த நிலை யென்றும், உருவமெல்லாம் தத்தம் உழைப்பால் பங் கப்படுத்தி அருவ நிலையாகிய ஆனந்தமே சிவமென்றும் சோதியென்றும் மகான்கள் வாக்கியத்தாற் காணலாம்.

இச்சையாம் விறகுமாண்டா லெண்ணமாம் வன்னிமாளு
நிச்சய மாகுந்தேயத் தியாகமா ளெங்ஙந்தே ரேறி
மெச்சிய வுதாரக்கண்ணால் வேட்கையான் மிகவும் வாடுங்
கொச்சைஞா லத்தை நோக்கிக் குறைவற விருப்பாய் நீரா.

— ஞானவாசிட்டம்

# 4. சிதம்பர இரகசியம்



மதுரை

அகண்ட பரிபூரண சச்சிதானந்த சுயம்பிரகாச விளக்கமே சிதம்பர இரகசியம். ஆக்கை இழிவென்று பலகாலுஞ் சிந்தித்துப் பகிர்முகநாட்டமின்றித் தன்னைத் தான் தேடி ஒய்ந்து நின்றவிடமே பஞ்சகோசத்துக் கிறுதியாகிய ஆனந்தமயகோசம் ஈதெனவறியாத நிலையே சிதம்பரம். இழிவை இழிவென்று உரைக்க வாய்ந்த காலமே தன்னைத்தானின்னதெனை அறிவதற்கும் தான் வேறு சிவன் வேறென் றெண்ணலே முரணென்றும் ஆறாறு தத்துவங்களுக்கப்பால் விளங்குமிடத்தில் மூச்சுப்பேச்சிலாது மனோமௌன விளக்கமாய் நின்ற விடமே ஆனந்தமென்றும் இவ்வானந்தமே ஈதெனப் பகர்க்கூடா நிலையன்றோ சிதம்பரமாம். போக்கும் வரவுமிலா இரவும் பகலுமிலா வாக்கும் வடிவுமிலாவொன்று சதாத் தாக்கு மனோலயமே சிதம்பரமாம். பாசவினையால் பரமிது வென்றறியக் கூடாத மோசமே உலகத் தடிப்பென்று கருதி, ஜீவபோதம்போய்ச் சிவத்தெளிவு வந்தவிடமே சிதாகாச வடிவாய்த் தானு மியங்கப் பொருந்தி தன் னிலே அண்டமெலாம் ஒரு கடுகளவாய்த் தோன்றி அண்ணல் திருவடியில் ஆன்மா அணைந்து இன்பத்தி லழுந்துவதே இரகசியமென்று சொல்லப்படும். முப்பத்

தாறு தத்துவத்திற் கப்பாற்பட்ட மோன முத்திரையில் விளைந்த சுகானந்தமே சூக்குமத்திற்குச் சூக்குமமாயும் புமான்கள் இத்தகைய ஞானம் புண்ணிய வசத்தால் கிடைப்பதென்றுஞ் சொல்வதற்குக் காரணமாயுமுள்ள தெதுவோ அதுவே சிதம்பர இரகசியமாம். சுத்த பரம் பரையாய்த் தன் சுதந்தரம்போய் ஒன்றோடொன்றி நிற் பதே சிதம்பரமாம். இச்செப்பரிய அம்பரத்தைக் காத்த ஆன்ம நிலையையுடைய அருளாளன் கற்பூர தீபம்போல் ககனவட்டத்தில் காண்பானுங் காட்சியுமிரண்டுமிழந்து கதிரொளி விளக்காய் விளங்கி நிற்பதே சோதியுட் சோதியாம். ஈதன்றோ சிதம்பர இரகசியம்! இத்தகை யப்பிரயாசை யன்றோ பிறப்பறுக்கும் வழி! புண்ணிய வசத்தால் கிடைத்த இப்பெரும்பாக்கியத்தை அடைந்த நம் ஆண்டவரன்றோ அருட்சோதி இலக்கணத்துக்கு வாய்ந்த புண்ணிய புருடர்! கற்பனையற்றதும் கோச மெலாம் நீங்கிக் கோசியாகி உற்ற ஆனந்தமே தன்னுரு வாய்க்கண்டும் வெளியாய்க் கொண்டுங் குற்றமெலா மற நீங்கி அறிவாய் நின்றிருத்தலே சிதம்பர இரகசியம். கண்டேனெனுஞ் சொல்லுமிழந்து இனிமேல் யாதும் விளம்பாது நிற்குமிடமெதுவோ அதுவே சிதம்பரமாம் அறிவே சிவமென்றறைந்த திருமூலர் வாக்கினைச் சதா யநுட்டிக்கும் புண்ணியர்களே சர்வ சங்கற்பமும் நீங்கிச் சங்கையறவே நின்று பொங்கிவரும் அநுபவானந்தப் பாலுண்டு தங்கபொம்மை போலே நின்று சுவர்ண தேகத்தைப் பெறுவர். இத்தகையதீரம் வாய்ந்த துற விக்குத் திருட்டாந்தம் போர்முகத்து நின்று யுத்தஞ் செய்யும் வீரர் மனமொக்கும். உலகத்தின்கண் விளங்கு கின்ற அண்ட சராசரங்களுந் தானே யிருக்கின்றே னென்றும் தன்னருள் வியாபகமே தக்க நிலையென்றுஞ்

சிதப்பர நிலையென்றுஞ் சிறந்தோர் சொல்வர். உண்ணும் பரம்பொருளை ஊகித்துத் தானின்னதென்னறிதலே தகராகாச இலக்கணம். வாதனைகளெல்லாம் வாதிக்கா நிலை ஐக்கியமே வரம்பிலா இன்பநிலை. இதுவன்றோ நம் சச்சிதானந்தத்தின் பெருமை! போதகாசனைத் தேடித் தேடி அலைவது நற்போதத்தி னியற்கையென்றும் நல்லறிவு பிறந்ததென்றுங் களித்து வீற்றிருக்கு மிடமன்றோ சிதம்பரம்! அநுபவானந்தத்தில் வீற்றிருக்கும் பெரியோர் அறிவையே தெய்வமென்று அதாவது அருவ நிலையாகிய ஆன்மவெளியி லொளியாக நின்று சதா சர்வானந்தத் தூக்கம் பெற்றுச் சகச நிட்டையை எய்துவர். இதுவன்றோ சிதம்பர இரகசியம்; பிருதிவி சம்பந்தமாகிய தூலதேகத்தை வளர்க்கும் அன்னமயகோசமும் இது பிருதிவி சம்பந்தமாம்; பிராண மயகோசமுதல் விஞ்ஞானமயம் வரையில் அந்தக் கரணங்கள் வியாபாரஞ் செய்தலே வாயுவின் சம்பந்தமாகும். ஆனால் பிராணமயம் அப்பு சம்பந்தமென்றும், மனோமயம் தேயுசம்பந்தமென்றும், விஞ்ஞானம் வாயுவின் சம்பந்தமென்றுஞ் சொல்வர். பிராண வாயுவானது துரிய சாக்கிரத்திற் கூடி நின்று வியாபாரஞ் செய்யுமிடமே அருட் சிதம்பர மென்றும், ஒளி சிதம்பரமென்றும், உயர்சிதம்பர மென்றும், உத்தரஞான சிதம்பரமென்றும் உயர் நிலையை உடையோர் இனையும் வராளமாக வியப்புடன் விளம்புவர்.

பூரண வியாபகமாய் விளங்குஞ் சிவம் எல்லாப் பொருள்களில் வியாபித்திருக்கிறது ஒவ்வொ ரானமாக் களுக்குந் தெரியுமல்லவா? சிவவியாபக மென்பது எங்குபார்த்தாலும் ஆனந்த வடிவமாய்த் தோன்றுவது.

இங்ஙனம் ஆனந்த மென்பது மனமிறந்த நிலையாகும். இத்தன்மையதாகக் கூறப்பட்ட சர்வானந்தம் மூன்று அவத்தைகளை நீங்கித் தானாய்த் தனித்து, தானாக நிற்பது. உலகத்தின்கண் அண்டசராசரங்களிற்றோன்றும் ஒவ்வொன்றும் பஞ்சபூதவடிவமே. எப்போது வடிவமாகக் காணப்படுகிறதோ அப்போது அவ்வடிவம் அழியுமல்லவா? பஞ்சபூதங்களின் பரிமாணங்கள் சிறிதேனுங் குறைவின்றி நிற்பதே பிண்டோற்பத்தி. இத்தகைய வடிவங் குன்றினகாலத்து இதன பரிமாணங்களும் குன்றுமல்லவா? குறைவது நிறைவது மியற்கையுளதாயி னிதற்கு முதற்காரணத்தை நோக்கு மிடத்துச் சுத்த சிவவியாபகம் விளங்கும். வியாபக மென்பது விளக்கமெனப்படும். ஐம்பூதங்களில் நான்கு பூதங்களிடமாக் கொண்ட தலங்களில் வியாபித்துள்ள பிருதிவி, அப்பு, தேயு, வாயுலிங்கங்களாம். ஐந்தாம் பூதமாகிய ஆகாசம், பூதமென்று எவ்வகை ஆற்றலாலுங் கூறக் கூடா. ஏனெனில் நான்கு பூதங்களில் ஒன்றன்பினொன்றாய் ஆகாசத்தைப் பிறப்பிடமாகக் கொள்ளாவிடி லேனைய பூதங்களை எவ்வகையாலறிதற் கூடும். கடினமான பதார்த்தங்கள் பிருதிவி ரூபமாக அப்புவை இடமாகக் கொண்டும் அப்பானது தேயுவை இடமாகக் கொண்டுந் தேயுவோ வாயுவை இடமாகக் கொண்டும் மற்று வாயுவோ சொல்லுவதற்கிடமில்லா வியாபகத்திலுதித் தொடுங்குவதாம். அதாவது வாயுவென்னுஞ் சொற்குக் காற்றெனப் பொருள்படும். காற்றானது எல்லாப் பொருள்களைக் காட்டிலும் இலேசானது. இத்தகைய இலேசானபொருளைச் சரீர சம்பந்தத்தாலன்றி மற்றெவ்வகையால் நிரூபிக்கிறது. இலேசுக்கிலேசான நுண்ணியகாற்றை ஆங்கிலத்தில் (Ether) என்றுஞ் சொல்லுவர். சொல்லு

வதற்கிடமில்லாத ஒன்றை எவ்வகையாய்ப் பொருள் படுத்துவது? சொல்லத் தகாததைச் சொல்லுவது முரணன்றோ? இதை ஆன்மஞானிகள் தன்சுவாநுபவ முதிர்ச்சியினால் நண்ணிய இரகசியத்தை இந்தேகத்தின் கண்ணேயறிந்து இதையே சிதம்பரமென்றுஞ் சொல்லுவர். இவ்வநுபூதியர் தம்முழைப்பால் கண்ட பேராற்றலினுட்பத்தைச் சிதம்பர இரகசியமென்றுங் கூறியுளார். இரகசியமென்பது அறிவிலிகள் மறைபொருளென்று சொல்லுவர். காலத்திரயத்திற் கட்டுப்படா ஆகாசம் பரவெளியாகவும் ஆன்ம வெளியாகவுஞ் சிவ வெளியாகவுந் தோன்றுமிடத்து இதை எவ்வாறு இரகசியமென்று கூறுவர்? இங்ஙனம் இரகசியமென்பது நன்குணர்ந்த தீர்மானத்தில் காணேமே. ஆகையால் நுண்ணுணர்வில் விளைந்த பெருட் பயனிலையை யுணர்த்துமென்பதே. மனோபாவத்தினு லறியக்கூடா சித்சொரூப வியாபக விளக்கமே சித்சோதி. சித் = அறிவு = ஜோதி. அறிவு தெளிவே அருட்பெருஞ்சோதி யென்று தெரிந்து மௌன நிலையில் சுகமாய் நிற்பதே இதன் முடிவு.

இஃதன்றியும் பின்வருவனவற்றால் இவ்வுபந்நியாசத்தின் கருத்துரை நன்கு புலப்படும். மற்றும் "The Spiritual Light in Arutpa" என்னும் நூலின்கண் விரிவாகக் காணலாம்.

---

## " THE SYMBOLISM OF GOD NATARAJ "

The mighty Mahadev treads upon Muyalaka which represents Maya. It has no power over Him. The other foot lifted upwards indicates the Turiya state. His Abhaya Hastham offers protection to His Bhakta who seeks shelter under his Lotus feet. Yet in another hand he holds up the deer symbolizing the fretful mind kept in check not letting it either to act or to react. In the third, he holds the Conch signifying that the entire manifested Universe is the Sabda Brahman the manifestation of Pranava and the fourth-hand holds Damarak creating and destroying innumerable systems of worlds with every turn of his wrist. There is fire held in one of his left hands. This is to destroy the ignorance of humanity and illumine their hearts. There is the Varada hastam offering boons to all who approach Him. His garment is tiger skin signifying Ahankar perfectly innoccuous. Mother Ganga is Kriya Sakti. In the human body she is seated in the solar plexus. She is considered as " the genetrix of the process of evolution of the five great elements." Can any one who understands our symbology deny that we have associated certain ideas such as purity, truth, detachedness, omnipresence etc. with certain images? Are the Hindus for that reason idolators? We know that they are necessary and the Lord knows that the worship is meant for Him. Why should we care for ignorant and interested Critics?

The worship of symbols and images at best contributes to Chitta-Suddhi and to a little extent renders the mind one-pointed. Occasionally visions of truth may

flash also. But these votaries both of the Pravarthi and Nivarthi margas who are worshippers of images etc. are still dualists. They have not yet reached the stage of oneness. They have not realised the highest truth. They have not set their feet on the higher rungs of the ladder set up by Upanishads, the Vedanta.

They have not transcended mind. These votaries are Vedantins of course, to whatever school of philosophy they may belong, whether Dvaita of Shri Madhva or Vishistadvaita of Shri Ramanuja or Advaita of Shri Sankara. These Schools of philosophy do not contradict each other. On the other hand they blend into the other in a progressive scale, Dvaita leading to Vishistadvaita and Vishistadvaita to Advaita. To attain the highest truth in Nirvikalpa Samadhi, Advaita consciousness is necessary. Advaita teaches that the universe is He. It says, He the Parabrahman is All. He is the Truth, the Reality. Without hesitation, it proclaims with thundering voice that all that is, is Atman and that Atman is all. The one Atman seen through time, space and causation appears as many. Parabrahman seen through Mind is the Universe. Transcend the mind, what remains is that-Sat-Chit-Anandam. How to realise this Atman, the Self? How to attain this end? The answer is through Chitta-Suddhi, purification of mind and attaining wisdom, which leads to realization. How to purify the mind or attain Chitta-Suddhi? It is here that the Vedanta gives its final word on ethics. According to Vedanta the end of ethics is the complete effacement of self. With this end always in view, it directs its adherents, to lead their lives in the world. Its votary may do works only there should be no self in the business. "Remember the Lord," it says, "and do

the work as an act of worship unto Him." He may be a Bhakta who has surrendered himself, body, mind and all unto the Great one, or again, he may be a yogi who meditates on the Self to forget the self. Vedanta does not care how he effaces his self, whether by practising Karma, Bhakti or Yoga or all three together. All that it directs is to efface self and to realise the Self. It says that as one strives for self effacement, one's chitta or mind becomes more and more purified.

When one's heart is purified and is ready for realization, the divinely appointed Guru comes. He reveals the Truth and hands over the key to open the hidden chambers of the effulgent Light. The disciple must look upon his Guru as God manifest and have intense faith in His teachings. The intenser Guru Bhakti is, the quicker will the realisation be and then the dream breaks for the disciple.

" Thou Sun who hast covered the Truth with thy golden disc, do thou remove the veil, so that I may see the Truth that is within thee. I have known the Truth that is within thee, I have known what is the real meaning of thy rays and thy glory, and have seen "*That*" which shines in thee ; the Truth in thee I see, and that which is within thee is within me and I am that." Aum Tat Sat.



# 5. ஆத்மானுபவம்



## திருமுல்லைவாயல்

இயற்கையாயுள்ள ஒவ்வொரு பொருளின் அற்புத அதிசயத்தைச் சிற்சில தறிந்துஞ் சிற்சிலது தனது அறிவுக்கு எட்டாமலிருப்பதை அறிய முயற்சியில்லாமல் வீணில் விட்டிருக்கிறோம். அறிவினாலறிவை விளக்குவதே அறிவன்றிப் பிறி தொன்றில்லை. அறிவினிலக்கணம் இத்தகைய தென்று ஒருவாறு யூகிக்கலாம். ஆனால் இவ்விலக்கணமமைந்த அறிவு என்ன வென்று யோசிக்குமளவில் இன்னதென எளிதிற் புலப்படவில்லை. இப்படியிருப்பது நம்முயற்சியின் தளர்ச்சியேயன்றி மற்றென்ன வெனக்கூறுவோம். இப்பொழுது மேற்றிசையார் நூதனமாகக் கொண்டுவந்த இயந்திரங்களுள் ஒவ்வொன்றும் வியப்பினும் வியப்பே. ஒவ்வொரு நூதனக் கண்காட்சிகளின் நுண்மை இன்னதென அறிவுக்குச் சில ஒட்டியுஞ்சில ஒட்டாமலு மிருக்கின்றன. எண்ணிறந்த இயந்திரங்களின் விசித்திரவல்லமையை வாயாரச் சொல்வதற்கு வாயிழந்துங் கையிழந்து மிருக்கின்றோம். இது நம்மறிவீனமையே. அதாவது அறிவைத்தக்கவாறு பயன்படுத்தாமற்றூங்கி சோம்பேறியாகித் திரிதலாம். இவ்விருதிறமறிவி னனுபவத்தில்

நிகழ்ந்ததே. அறிவாலறியும் அறிவும் அவ்வறிவின் அனுபவத்திலுதித்த பேரின்பமும் ஆத்மானுபவமாம்.

ஆத்மானுபவமென்பது ஆன்மா மேற்கூறியபடி அறிவாலறியும் அறிவேயாகி அவ்வனுபவமாயே நிற்பது. ஆன்மா சொல் வடிவமாகத் தோன்றினும் அனுபவத்திற் பொருட்படும். அனுபவமென்பது அகண்ட அறிவேதாலுய் விளங்கி நிற்பது. இத்தகைய தத்துவ ஞான மெப்படி வருமெனில் சரீர மெனும் புற்றில்வாழும் மனமாகிய பாம்பு விடய வாசனைகளாகிய புறப்பற்றை நோக்காது அகத்து விளங்கும் அகண்டாகார விருத்தியாம் சுத்த நிலையை அடையவேண்டும். மனமானது தன்னனுபவ நிலையை அடைந்த காலத்து உடம்பு, மனோபாவனை, புத்தி, மூன்று மொருங்கே மன்னும். மனம் நாடு நிடமறிந்த ஒருவன் பரிபூரணமாக நிறைந்துள்ள பரமசிவத்தை அகமும் புறமும் சதாபக்தியுடன் சிந்தனை செய்து கண்ணீருங் கம்பலையுமாய் மனங்கசிந்து அனலிடை வாய்ந்த மெழுகுபோலுருகி லயமாதலே ஆன்மானுபவமாம். இவ்வனுபவஞ்சிற்சிலர்க்கு எளிதிலுண்டாம். இன்னுஞ் சிற்சிலர்க்குத் தத்தம் பிரயாசைக்குப் பிரதிபலனாகக் கிடைக்கும். மற்றுஞ் சிலர்க்கோ கிடைப்பது துர்லபம். எப்படியிருந்தபோதிலும் இடைவிடா முயற்சி மிக்க நன்மை. முமூட்சு நிலையையுடைய முத்தர்கள் சுத்தானுபவவாயிலாகவுள்ள சாந்தி, விசாரணை, சந்தோடம், சாதுசங்கம் என்கிற நான்கினுள், சாதுசங்கம் சாட்சாத்கார சொரூப நிலையை விளக்குமேயன்றி ஏனையவற்றுலெளிதிற் புலப்படா. "சத்சங்கத்தே நித்சங்கத்வம் etc. etc. etc. நிச்சலதத்வம் ஜீவன்முத்தி" ஆகையால் சகல சாஸ்திரம் யாவற்றிற்கு மேம்பட்டுள்ளது

சாதுசங்கமே. சாதுக்கள் தரிசனத்தினாலேயாவது அவர்கள் சொல்லின் தன்மையினாலேயாவது ஆன்மானுபவம் விளங்கும். இவ்வனுபவ விளக்கம் எய்து உய்தல் பின் வருபாறுகும்.

நான்கு வேதங்களுக்குஞ் சகல சாத்திர மிதிகாசங்களுக்கும் பிறப்பிடம் அறிவே. அறிவின் குணானுபவ மொருவனறியவேண்டி விருப்பமுடைய வனாயிருந்தாற் பஞ்சேந்திரியத்தில் விளையும் உலகவிஷயமான பற்பல கெடுதிகளைப் புறம் நீக்கி, பஞ்சேந்திரியத்திற்கு முதற் பீடமாயுள்ள அறிவை அகமுகப்படுத்தி நிற்றலே. இது சாதனைக்கு முதற்படியாம். இடைவிடா இவ்வகைச் சாதனை அபிவிருத்தி யடையுங்காலத்தில் தான் கண்ட தெல்லாங்களிப்பே, உண்டதெல்லா முணவே, உணர்ந்ததெல்லாமுயிரே என்பது உதிக்கும். இவ்வனுபவ மெப்படி எளிதிலொருவனுக்கு விளங்கும்? விளங்கவே விளங்கா. இது பின்வரும் செய்யுளாற் செவ்வனே விளங்கும்.

"அறிவைப் படியீ ரயலைப் படிப்பீ
ரறிவை யறியீ ரயலை — யறிவீ
ரறிவைச் சுகியீ ரயலைச் சுகிப்பீர்
பிறவி யறுப்பதெவன் பின்"

தத்தமுழைப்பால் முதிருமின்பமே பேரின்பம். இதைச் சரியாக ஒருவனறிந்தாற் சுருதியுக்தி அனுபவத்திற் கிசைந்து மற்றதனைத் தன்வயப்படுத்தித் தானசை வற நிற்றலே தத்த மிலக்கணமேயாம்.

இதில் நேர்ந்த பெரும் பிரயோசனமே அன்பென்றும், அருளென்றும், சிவமென்றுங் கூறுவர்.

நாம் நன்று இதனை ஆயுங்கால் எவ்வளவோ பாக்கியவானென்று எண்ணி எண்ணி எப்பொழுதுஞ் சிந்தனையேயன்றிச் சிவனில்லை. சிவனையடைய வேண்டுமானால் சிந்தித்தல் தொழிலை இடைவிடாமுயற்சி செய்தல். சிவம் என்பது மங்களம். ஆனந்தமாம் குணத்தை வகித்தவரெல்லோரும் வள்ளலாரே. இக்காலத்தில் சிற்சில வருடங்கட்குமுன் மேற்கூறியவாறு உழைத்து ஆனந்தமயமாய் அறிவைச் சிவமாக்கி சிற்சோதியிற் கலந்தும் சிந்தையினுதித்த சிறப்பெல்லாஞ் சீருட் பெற்ற திருவருட்பாவாக உவந்தளித்த திருவருட்பிரகாச வள்ளலாரென வழங்குஞ் சிதம்பரம இராமலிங்க சுவாமிகளே யாம் வணங்குங் கடவுள். இவ்வாத்மாநுபவவுண்மை விளக்கு முயர்திருவருட்பா வொன்றே யாம் வாசிக்கும் வேதம். இப்பேறுற்றறனுடைய பெருந்தகைப் பெம்மான் சிவகாருண்யத்திற் சிறந்தவராகையா னுலகுய்யும்படி தானனுபவித்ததை உலகமுய்யுமாறு ஏற்படுத்திய அருட்பா உலகத்தில் வடமொழியறியாத யாவரும் வேதமாக வழங்கி வருவதைநாம் கண்டுங் கேட்டுமிருக்கிறோம்.

சித்த நிலைதானே சிவமென்றறிந்து உத்தமரெல்லோரும் உள்ளன்போடு அவாமீக்குற்று அருட்பாவை அநுதினமும் பேணுதல் பெருங்கடன். ஆத்மாநுபவம் பின்பகுதித் தொடர்ச்சி பின்வரும் இரண்டாம் பாகத்திற் காணலாம். இதுவுமன்றி அருட்சோதி மலர்கள் நான்கிலும் மேற்சொன்னவைகளெல்லாம் செவ்வனே விளக்கப்பட் டிருக்கின்றது.



# 6. மனோலயம்

## வடலூர் சாலை

மனோலய மென்பது மூன்று அவஸ்தைகளைக் கடந்து நான்காம் பூமியாகிய துரியா தீதமென்னும் பேரானந்த நிலையை அடைந்து மௌனசமாதியில் வீற் றிருத்தல். மேலும் உயிருக்கு உயிராயிருந்து திரு வருளாகிய தன்மையுந் தானாகி ஆசாரியராகிய முன் னிலையுந் தானாகி, அவ்வருட் பேருற்றலாற் கூறப் பட்ட வேதாகமங்களாகிய படர்க்கையுந் தானாகி, சுருதி குரு சுவானுபவங்களால் யான் எனது என்னும் போதவொழிவில் நிகழ்கின்ற ஆனந்தமும் தானாகி, அவ் வானந்த மிதுவென்றுங் கூறக்கூடாத ஆநந்தாதீதமுந் தானாகி நிற்குந் தொழிலையுடைய மனாதீத சுகாதீத நிலையை அடைவதற்கு யாதும் ஐயமில்லை. தன்மை முன்னிலை படர்க்கைக்கே ஞாதுரு, ஞான, ஞேய மென் றும் கூறுவர். இஃதன்றி ஆகாயம் போல் விளங்கு கின்ற அறிவே சிதாகாயம். அறிவுக்கு மேம்பட்ட தொன்றுளதாயின் அவ்வறிவு சிதாகாயமெனப் பொருள் படுமா? மற்றெங்ஙன்? இயற்கையாகவே அறிவுக்கு அறியுந்தன்மை இருந்தபோதிலும் நாம் பாடுபட்டு அடைய வேண்டிய தென்னை? அறிவை அறிவால் விளக்கி அதிலுறு மின்பமே பேரின்பமெனக் கொள்வ

தாம். இதன் பெருமையைச் சொல்லுமிடத்து அத னைச் சொல்லவொட்டாத பேரானந்தமே மௌனமாக் கும். இதன் கருத்து கண்ணுடைய வள்ளலாரின் கோட்பாட்டால் நன்குவிளங்கும். சகல வித்திற்கும் மேம்பட்டுள்ள மனது தன்னால் தானடைந்த இன்பத் திற்கு முதற்காரணத்தை நோக்கில் முழுதுஞ் சந்தே கத்திற்கு இடங்கொடுக்கிறது.

> தன்னையு மெட்டறியார் தம்பிரா னெட்டறிவார்
> என்னபுதுமை யிஃதென் சொல்வேன் — என்னநிலை
> தன்னைவிட்டுத் தன்னிழலைத் தானளப்பார் போலுமே
> என்னவித ஞான மிது.

என்னும் ஆன்றோர் வாக்காற் காண்க. தன்னுள் அறியப்பட்ட கருவிகளைச் சடமென்றும் அவற்றைத் தனக்கு அறிவித்தது அருளென்றும், அவ்வன்பின் மிகுதியே அருளென்று கூறும் அருட்பிரகாச வள்ள லாரின் அருட்பாவே இதற்குத்தக்க சாட்சியாம். மன மென்பது குறித்தவிடம் நாடுஞ் சங்கற்பமேயாம். இத்தகைய மனம் விஷயமொன்றை நினைத்தபோது அவ்விஷயத்தைப் பின்பற்றித் தாவுங்கால் தானெழுந்த விடத்தில் இல்லாமையாலும் சுகத்தை இச்சித்த அம் மனமானது சுகத்தையடையு முன்னர் பட்டகஷ்டத்தை நோக்குங்கால் சுகங்கெட்டது போற் றோன்றுகிறது. மனமானது உபசாந்தவிடமே நாடி யுபாதி தானல்ல வென்றுந் தன்னைப் பூரணமாக் கண்டவிடத்துத் தன்னைவிடப் பிரபஞ்சமில்லை யென்றும் நிட்டையி லிருந்து இத்தகைய அறிவோடு வசப்பட்டு அதன் வியா பகமாகவே விளங்கிச் சுயோதயமாகப் பிரகாசிக்குந் தன்மை வாய்ந்து விளங்கா நின்ற ஆனந்தம் மனம்

கரைந்த விடமென்றும் மனோலயமென்றுஞ் சொல்லு வார். தேகேந்திரியப் பிரபஞ்சம் யானென்று அபிமானிக் கிற ஜீவத்துவமிருக்கிற பரியந்தம் தேகம் வருமாகை யாற் சப்தமுதலிய விஷயங்களை மனத்திலும் மனமுத லாகிய கரணங்களை ஜீவ சைதன்னியத்திலும் சீவனை அறிவு சைதன்னியத்திலும் ஒடுக்குமிடத்து உதய மாகின்ற சச்சிதானந்த சொரூபமே மனோலயம். சந் ததமுஞ் சிற்பரக்காலழியாத தற்பரத்தைச் சார்ந்து வாழும் புந்தி சதாகாலம் சர்வானந்தம் பெற்று, காந்தி மதியிலே ககனவட்டத்துட் கரைந்து கற்பனையற்று நாடு மிடமே மனோலயமெனப் பொருள்படும். இது காறும் கூறிப்போந்த மனமுருவபாவத்தில் நின்று தம் தம் உழைப்புக்குத் தக்கவாறு உருவபாவனை நசிக்கப் பின் னறிவது மனோலயமென்றுங் கூறப்படும். அன்றியும் அஞ்ஞான்று வியாபக விளக்கமாய் இலக்ஷியார்த்த நாட் டம் நீங்கும். வியாபக விளக்க முடிவில் நின்று சிதாகாசத் தைக் கண்டு பலகாலும் விளங்கிய அதிசூக்குமமே அந்த இரகசியப் பொருளை ஏகமே அத்வைத நிலைமை யாகிய சொற்பிரகாசத்தின் கயிற்றரவுப் போற்றோற்றல் மாத்திரமாகத் தோன்றி நிற்பதே மனோலயமென்றும் அதாவது தேகமாயும் விளங்குகிறதில்லை ; அதாவது ஒன்று கண்டாலொன்று காணாததெதுவோ அதுவே மனோலயம். சொல்லிறுதியாகிய சூனியமுடிவே கற்பனு தீதமென்றும் மனமுதலிய கரணங்களாற் காப்பாற்றப் பட்டதாயிருப்பதாலும் அவ்வித சொரூபத்தைக் கற் பனையான மனதானது சிந்திக்கப் போந்தபோது அம் மனத்தை சொரூபம் விழுங்கிக் கற்பனை இரகிதனான கடவுளே மனோலய மெனப்படும்.



# 7. தானாயிருப்பது தவம்
# தனித்திருப்பது சமா;



## வடலூர் சாலை

இம்முதுரை சுவாநுபூதியர் ஆன்மாக்கள் வழிபடும் பொருட்டெடுத்துச் சொன்னதேயன்றி மற்று வேறல்ல. சுவாநுபூதி யென்றால் தத்தமுழைப்பால் சங்கற்பம் நீங்கிச் சதா சிந்தனையிற்றோய்ந்து மனம் சத்துவகுணம் பெற்று ஆனந்த பரவசமாய் நிற்றல். ஆராய்ச்சியின் கண்ணே உலகமென்பது கற்பனை வடிவமென்றும் இக்கற்பனைக்குக் காரணம் தானாயிருந்து தானா யழிக்கவேண்டுமென்றும், அப்படி அழிக்குந் தொழிலில் கைதேர்ந்தவனே கைவல்யமுடையவனென்றுங் கூறப்படும். உலகமும் அதிலுண்டான சராசரங்களுந் தன்மயமாகி உலகானுபவத்தை நோக்குழி உளதாயினதனை ஆராய்ந்து சுவாநுபவ முதிர்ச்சியால் நோக்குழி இலதாயும் முடிவு பெறுகிறது. தானென்பதும் நானென்பதுஞ் சொன் மாத்திரமேயன்றிப் பொருள் முடிவில் நானே தானாகின்றது. அறிவு நாட்டத்திற் சதாகாலம் வாழ்ந்திருக்குமொருவன் உலகத்தின்கண் வயப்பட்டானெனின் நாட்டத்தின் கண்ணிருந்து பிரிதற் பொருட்டே. அறிவு நாட்டமில்லான் உலகத்தில் வயப்பட்டவனென்றுந் தத்துவக் குழாங்களினூடே கூடியிருப்பவனென்றும் ஆன்றோர் கூறுவர். இங்ஙனமிருக்க முன் ஞான்று இவ்வான்மாவாகிய நான் நானல்ல நானல்லவென்று சொல்லு

வது, நானல்லவெனச் சொல்லியுமீற்றில் நானே நானாவது என்று சொல்லுவது முரணன்றோ? இது ஆராய்ச்சியினீற்றில் விளங்கிய சித்ரூபமாகிய சிற்பிரகாசம் நானென்றதே. இத்தகையதாகுந் தன்மையே திருவருளென்றுங் கூறப்படும். அதாவது சங்கற்பத்தைச் சங்கற்பத்தாலழித்து அனாதி தொட்டு விளங்குகின்ற யெதார்த்த சொரூபமே ஆன்றோர் தானாயிருப்பது தவமென்றும் இத்தகைய சொரூபசாக்ஷியின் சுக வடிவம்பெற்றுக் கற்பனையாகிய உலகத்தைக்கழன்று கண்ணுக்குக் கண்ணாயுள்ள கணவனைக்கூடிக் கலந்திருத்தலெதுவோ அதுவே தனித்திருத்தலெனவும் அத்தனை வீற்றிருப்பதற்குத் திருவருள் அத்தியாவசியமென்றுங் கூறுவர்.

இங்ஙனம் கூறிப்போந்த விஷயங்களெவ்வொன்றும் சுவாநுபூதியர்க்கே விளங்கும். மற்றையோர்க்கு எங்ஙனம் பொருள் படும்? இதுவே நமது சுவாமிகள் திருவருட்பாவின் முன்னர் ஆங்காங்கு தனதநுபவ உழைப்பில் விளையும் பெரும்போக்கை ஆன்யாக்களுக்கு வாராளமாய்ப் பொழிந்தனர்.

> நாமா யிருந்தோமு நாமோநா மல்லவாய்ப்
> போமாறு போகும் பொருளும்நாம் — யாமத்துத்
> தானேயுறங்கிச் சகத்துருவாய்த் தோற்றிவிழித்
> தானே யவன்போலத் தான். — சொரூபசாரம்

இது நிற்க, தன்னையுந் தானாகிய அழகையுந் தானே அறியவேண்டி முகம் பார்க்குங் கண்ணாடியில் எதிரிட்டுக் காண்பதுபோல் தானாகிய விருத்தி ரூபமே தன்னையே பூசிக்கின்றதுந் தன்னையே தோத்திரிக்கின்றதுந் தன்னையே ஆனந்தமயமாய் நாடி, தான பந்தப்பட்டதாயுந் தான் பந்தப் படாததாயுந் துக்கிக்கின்றதுஞ் சந்

தோஷிக்கின்றதும் இத்தனையுந்தானல்ல தானல்ல வென்று அறிந்து விளக்கமாய்த் தனித்திருப்பதுவே சமாதி. மற்றுந் தானுயிருக்கின்ற விளக்க வியாபகம் அப்படியே இராமல் ஸ்புரிக்கின்றபோது விருத்தி தன்னை அறியாமலே நீங்கியிருத்தலான் மௌன துரியனுமாகின்றான். தானுயிருக்கின்ற நிரதிசயமாகிற அனுபவத்தில் திரி குணாதீதமாயுங் காலாதீதமாயுமாகின்றான். இத்தகைய ஒரு பாவஸ்துவே ஞானசூரியனென்றுஞ் சிதாகாசனென்றுமை இக்கருத்தை அறியாமையால் விளைகின்ற பிறப்பு இறப்பெண்ணுந் துக்கத்தை நீக்கவல்லாரே நித்திய சமாதி அடைந்தவராவர். இவ்வாறு சொல்லிய நித்திய வைராக்கியத்தால் அன்னிய மின்றித் தானே தானுயிருந்துள்ள நிரதிசயானந்தத்தை அடைந்து ஞான சொரூபமாகிய அருட்பிரகாச சொரூபமாய் விளங்குகின்றான். அகண்ட சச்சிதானந்த வடிவமாயுள்ளதே பரமாத்மா. அப்பரமாத்மா சகல ஜீவிருதயபீடத்தில் அகண்ட தேதீப்யமான அண்டாண்ட நிற்குணண்ட சகல தொழில்களும், புத்தியென்னுஞ் சாரதியில்லாமல் எல்லாம் வல்ல சித்தான தேஜோவீக்ஷணியத்தால் நானென்னும் பேர்க்கே சத்துவகுணம் வாய்ந்து சச்சிதானந்தம் பெற்று வாழ்ந்திருப்பன். இவ்விடம் சத்துசித்து ஆனந்த சொரூபமாகிய தெதுவோ அதுவே தானென்றும் அதனை ஈதென அறிந்த தெதுவோ அதுவே தனித்த ஆன்மாவென்றுந் தனித்த சிவமென்றுஞ் சுவாநுபூதியர்கள் கூறுகின்றனர். பிறகு சமாதி இலட்சணம் வாய்ந்தோர் தம்மை மறைத்த இருளே ஆவரணமென்றும் தம்மைச் சரீரமாகத் தோற்றினது விக்ஷேபமென்றுங் கூறியுளார். ஏனெனில் அறியுந் தான் ஜடசத்தென்று அவ்வாறு அறியப்பட்ட தான் சொல்லுமிடத்துத் தானல்ல

வென்று எத்தகையாய்த் தீர்மானிக்கின்றேமோ அது போலவே தானாகியதே நினைப்பென்றறிந்தால் ஸ்தூல மில்லை; அறிவென்றறிந்தால் நினைப்பு இல்லை; ஆனந்த மென்றறிந்தால் அறிவில்லை இவ்வாறு ஆனந்தமய கோச வியாபக விளக்கமே துரிய சொரூபம். இது இத்தகை அறிவென்று சிந்திக்கின்ற வாகாரமே ஸ்தூலமாகிய எண் ணம் நீங்குமிடம். பார்க்கின்றதெல்லாம் சம்பூரண விளக்கமாய் பரமாய்த் தன்னுள் விளங்கித் தனித்திருப் பதுவே, சுத்தசுவானுபூதியர் "தனித்திருப்பது சமாதி" என்றனர். அதாவது ஏகாந்த சொரூபனுய் எங்கு முள்ளவ னென்று ஏக்கமுடையவனுய் எப்போதும் அழிவில்லை யென்றநித்தியனுயும் விளங்குகின்ற வியா பகம் ஊடுருவி மேல் கீழென்று சொல்லுவதற்கிடமில்லா மல் நிற்பதெதுவோ அதுவே அகண்ட பரிபூரணமாய் சச்சிதானந்த சொரூபமாய் விளங்கும் வியாபகவிளக்கம் ஆதியோடு அதாவது எண்ணத்திற்கு முதற்காரண மாயுள்ள தத்சொரூபத்திற் சமமாய் சங்கற்ப விகற்பம் நீங்கியிருப்பது சமாதியேயாம். மற்றும் வெளியிலு முள் ளும் விளங்காமல் விளங்குமொரு விஷயத்தை சுவானு பூதியர் உள்முகமாய் விளங்குவதே ஈஸ்வர துரியமென் றும், வெளி முகமாய் விளங்குவதுஜீவ துரியமென்றும், மத்தியில் விளங்குவது பிரம்ம துரியமென்றும் இவ் விரண்டு துரியமுங் குருதுரியத்தில் ஐக்கியப் படுங் காலத்தில் காண்பான் காக்ஷி காணப்படு பொருளான மூன்று பற்றற்றே மென்கிற விருத்தியுமின்றிச் சுயம் பிரகாசமாய் விளங்குபவனே பார்த்தவிடமெங்கு மொரு நீக்கமறநிறைகின்ற பரிபூரண சர்வக்ஞும் பெற்றுத் தானாய் விளங்குபவனே நமது குருநாதன்.



# 8. சமாதி இலட்சணம்



வடலூர் சாலை

"படைப்பானும் வியன்ஞாலங் காக்குமாழிப்
படையானும் படையளிக்கப் பட்டதெல்லாந்
துடைப்பானுஞ் சுருதிகளுந் தொழுது போற்றுஞ்
சொரூபா நந்தச்சுடரைத் தொழுதல்செய்வாம்"

சமாதியென்பது பஞ்சேந்திரியச் சேட்டையில் மனம் நாடாது நிறுத்தல். இன்னும் அகமுகமாய் நோக்கித் தத்துவசேட்டைக்குக் காரணமாகிய மனத்தை அறிவினிடத்து அடக்கிப் பற்றில்லாதிருக்கும் ஆன்மாவே தானென்று தரிசித்தல். ஸ்தூலம் எத்தகைய பஞ்சபூதங்களாற் கட்டுப்பட்டு இறுதியில் தத்தம் மாத்திரை குன்றி ஒடுங்குவதுபோலவே சூட்சுமத்திலும் இதுபோலவே காணப்படும். காரணமாகிய பிரகிருதி காரியமாகிய புருடனுடன் கூடித் தனதனுபவ வியாபகத்தாற் றெளிந்தால் காரண காரியம் பற்றுமா? புருடனாகிய ஜீவன் காரணமாகிய பிரகிருதியின் (தேகம்) வசத்தாய் நோர்ந்த தேகப் பிராந்தியை நோக்கிற் றூங்கியசொரூப விளக்கமே காரண காரியத்துக்கு அதீதப்பட்ட தென்றுங் கூறப்படும். இத்தகைய காரண காரியத்தைத் தோற்றுவிக்கும் சக்திகளிரண்டு. அவை மாயாசக்தி சித்சக்தி என்றலுமாம். அதனு ளில்லாததை உள்ள தென்றும் உள்ளதையில்லாத தென்றுந் தோற்றுவிப்

பது மாயை. இதை விளக்குவதற்குக் குருநாதன் முக்கியமாய் வேண்டுமென்பது அபிப்பிராயம். குருவானவன் தீவிரதர பக்குவனுக்குக் கிடைப்பனென்று அறிஞர் சொல்லுங் கொள்கை, முன்னர் சொன்ன சித்ரூப விளக்கமான குருநாத னருளாற் சற்சீடனது தேகபாவத்தை நீக்கி, சின்மாத்திர சொரூபமாகும்படி கருணை கூர்ந்து பரிபூரணமாகிய தன்னை அவனாகப் பாவித்து, அருட்கண்ணால் நோக்கலெதுவோ அதுவே சொல்லிறுதியென்றுஞ் சூட்சுமப் படிப்பென்றும் பகுத்தறிந்தோம். இது ஆகம வாயிலாக (அதாவது) ஆ — பசுவெனவும், க — பதியெனவும், ம — பாசமெனவுந் நிர்மாணிக்கப்படும். இதைச் சிற்றறிவுக் கெட்டிய வண்ணம் உலக உதாரண அனுபவ மூலமாக நாம் கண்டிருக்கிறோம். கோழியானது தனது கருமுட்டையை நீங்கித் தன்னுருவமாகும்படி பக்குவகாலத்திற் குஞ்சு பொரிப்பது போலவுங் குளவியானது தன் கூட்டில் வைத்த புழுவைத் தனது திருஷ்டியால் அதைத் தன்மயமாக்குதல் போலவுமென எழுதியுள்ள நெஞ்சறி விளக்கமென்னும் நூலில் வாசித்திருக்கிறோம்.

இத்தகையதான கோட்பாட்டை ஸ்ரீ நீலகண்ட பாஷியத்திலும் சரபோப உபநிஷத்து என்னும் நூலில் பிரமாணங்களினாலுஞ் சொல்லப்போகிறோம். குருவில்லான் ஞானம் சூளையிற் சுடா மட்பாண்டத்தை நீரில் வைத்த நோக்கும். ஞானமென்னு மக்கினியிற் சுடாத தேகம் ஸ்தூல தேகமாகவும் அப்படி சுட்ட தேகத்தைச் சூட்சும தேகமாகவுங் கூறினோம். ஸ்தூல சமாதியையும் இக்காலத்து அனுஷ்டித்துவரும் கொள்கையையும் நன்கறிந்திருக்கிறோம். இத்தூல சமாதி பிருதிவி,

அப்பு, தேயு சமாதி யென்று மூன்று வகைப்படும். இறந்ததை மண்ணுக் கிரையாக்கி மக்கச் செய்வது பிருதிவி சமாதியென்றும், இறந்த சரீரத்தைக் கங்கையில் மீன், சுறா முதலிய நீர்வாழ்வினத்திற் கிரையாகக் கொடுப்பது அப்பு சமாதி யென்றும், கட்டை வரட்டியையு மிட்டு, செத்த பிரேதத்தைச் சாம்பலாக்குவது தேயு சமாதி யென்றும் எஞ்சிய பின்னிரண்டே வாயு ஆகாச சமாதிகளைச் சூட்சம சமாதி யென்றுங் கூறப்படும். வாயு சமாதியென்பதே அட்டாங்க யோக மென்பதாம். இது உச்சுவாச நிச்சுவாச பிராணவாயுவினை அதாவது இடைகலை பிங்கலையின் கிரமத்தையும், இரேசக, பூரக, கும்பக விளக்கத்தையும் அருட்குரு முன்னிலையிற் செவ்வனே கேட்டுத் தெளிந்து சின்மயத்திற் கூடி நிற்றலே சிவராஜ யோகமென்று இத்தகையுடைய ஆன்மாக்களைத் தீயெரித்தல் கூடாதென்றும் நம் சற்குரு நாதன் திருவாய் மலர்ந்தருளிய திருவருட்பாவில் நன்கு விளங்கும்.

பிறந்தவரை நீராட்டிப் பெருக
வளர்த் திடுகின்றீர் பேய ரேநீர்
இறந்தவரைச் சுடுகின்றீ ரெவ்வணஞ்
சம் மதித்தீரோ விரவிற் றூங்கி
மறந்தவரைத் தீமூட்ட வல்லீரால்
நும்மனத்தை வயிரமான
சிறந்தவரை யெனப்புகழச் செய்துகொண்டீ
ரென்பிறந்து திரிகின்றீரே.

அணங்கமு பேரோசையொடும் பறையோசை
பொங்கக் கோரணி கொண்டந்தோ
பிணங்கழுவி யெடுத்துப்போய்ச் சுடுகின்றீ
ரினிச்சாகும் பிணங்களே நீர்

கணங்கழு குண்டாலு மொருபயனுண்டே
யென்னபயன் கண்டீர் சுட்டே
எணங்கெழுஞ் சாம் பலைக்கண்ட ரது
புன்செ யெருவுக்கு மியலாதன்றே.

குணம்புதைக்க வுயிரடக்கங் கொண்டது
சுட் டாலதுதான் கொலையாமென்றே
வணம்புதைக்க வேண்டுமென வாய்தடிக்கச்
சொல்கின்றேன் வார்த்தை கேட்டும்
பிணம்புதைக்கச் சம்மதியீர் பணம்
புதைக்கச் சம்மதிக்கும் பேய ரேநீர்
எணம்புதைக்கத் துயில்வார் நும்
பாற்றுயிலற் கஞ்சுவரோ யிழுதையீரே

புலைத்தொழிலே புரிகின்றீர் புண்ணியத்தைக்
கருங்கடலிற் போகவிட்டீர்
கொலைத்தொழிற் கொடியீர் நீர்செத்தாரைச்
சுடுகின்ற கொடுமை நோக்கிக்
கலைத்தொழிற் பெரியருளங் கலங்கினரக்
கலக்கமெலாங் கடவுணீக்கித்
தலைத்தொழில்செய் சன்மார்க்கந் தலையெடுக்கப்
புரிகுவதித் தருணந் தானே.

— திருவருட்பா

கற்பூரதீபம்போல அகண்டாகார விருத்தியிற் சகல கற்பனைகளுமிறந்து சுத்த ஈஸ்வர துரியவநுபூதியில் நாமரூபமற்று தானென்றும் நானென்றும் நாடாத நன்னிலையிற் காற்றிலகப்பட்ட காற்றாடி எப்படி வெளியிற் சுழல்கிறதோ அத்தகையாகவே அநுபூதி யான்மாக்கள் சிதாகாசவெளியிற் சுழன்றுகொண்டே சிற்பரஞ் சோதியிற் சிவம்போன்று சிவ சைதன்னியமாய் நிரதிச

யானந்தத்தில் வாழ்வர். இதுவே உமாபதி சிவாசாரிய சுவாமிகள் பின்வருமாறு கூறியுளார்.

"தானேதானுய் தன்னிற்றன்னை தானே
கண்டு தன்னல முற்று
வசையில் தத்துவமசிபதத் தெளிவால்
அகமே பிரம மாயினன்."

இது நிற்க, தத்துவ முப்பத்தாறையுங் கடந்து ஆணவ பிருளையுங்கடந்து சுத்தா வஸ்தையில் நிற்போர்க்கு எங்கும் பரிபூரணமாய் நிறைந்த சிதாகாச வெளியில் நின்று சிவ சொரூபானந்த வாழ்வைப்பெறுவர். இத்தகைத்தான ஜீவபோதம் சிவபோத மிரண்டு மொருங்கே சேர்ந்தயிடமே பரமானந்த மென்றுங் கூறுவர். ஜீவான்மாவாகிய அறிவு பரமான்மாவாகிய அறிவுக்கறிவாகிய தன்மைபெற்று மேலுங் கல்வி யறிவிற் சிறந்த சிரோன்மணிகள் ஜீவனைக் கண்ணொளியாகவுங் கண்ணொளிக்குக் காரணமாகிய கதிரொளியே பரமாத்மாவாகவும் கூறினர். இதுவுமன்றி நமது தவராஜசிங்கமாகிய ஜோதி சொரூபம் வாய்ந்த சுத்தவான்மா அவ்வுயிர்க்கு உயிராகி எங்கும் விளங்குகின்ற சுத்த சிவமயமாய் எவ்வுயிர்க்குஞ் சோதிமணி முடிசூட்டுஞ் சற்குருவாய்ச் சத்தியமாய்ச் சிவவொளியாய்ச் சிற்றம்பலத்தே சித்துருவா யெல்லாஞ் செய்திடவல்ல எனது சற்குருநாதன் இரவை அகற்றுங் கதிரொளியாகிய கற்பனை கடந்த கடவுளாஞ் சோதியாகிய திருவருட் பிரகாசவள்ளலாரனுபவமே சாட்சியாம்.

அண்ட வகை யெவ்வளவோ வவ்வளவு
மவற்றி லமைந்தவுயி ரெவ்வளவோ வவ்வளவு மவைகள்
கண்டபொரு ளெவ்வளவோ வவ்வளவு மவற்றில்
கலந்த கலப்பெவ்வளவோ வவ்வளவு நிறைந்தே

விண்டகுமோர் நாதவெளி சுத்தவெளி மோன வெளி
ஞான வெளிமுதலாம் வெளிகளெலாம் நிரம்பிக்
கொண்டதுவாய் விளங்குகின்ற சுத்தசிவ மயமே
குலவுநடத் தரசேயென் குற்றமுங்கொண் டருளே.

— திருவருட்பா

அகண்ட வியாபகத்தில் விளங்குமறிவு "சங்கர நெறிநில்" என்னும் முதுமொழியைக் கடைப்பிடித்து உருவ மற்று நிற்குண நிராமயமாய் நிறைவாய் நிர்காரச் சுத்தமு மாய்த் தூரமுமாய்ச் சமீபமுமாய்த் துரியநிலைச் சுடராக யெல்லாம் வைத்திருந்த தாரக சமாதியாய்ச் சித்தாரு வாய் நின்ற வொன்றையே நிநிலையென்று கூறப்படு மாதலால் இதை மனமிறந்த நிலையென்பர். இதைத் தான் தீர்க்க தீர்மாணிகள் நிரதிசய சமாதி யென்றுஞ் சொல்வர். இச்சமாதி கூடுமுன்னர் சுத்த ஆன்மாக்கள் தங்கள் சுவானுபவ ஆராய்ச்சியின்கண் நிகழும் விளக்க மாவது சாக்கிரஞ் சொப்பன மிறந்த இடமெதுவோ அதுவே துரிய நிலையென்றும் அகண்ட அறிவு விளங் கும் போதமென்றும் அநுபவமுறையா லாங்காங்கு இத்தகைய ஞானம் பெறுவது மகா அசாத்திய மென் றுங் கூறுவர். இதையே நெருப்பாறு, மயிர்ப்பால மென்று அநுபூதிமான்கள் கூறியுள்ளார். இத்துரியம் மூன்று வகைப்படும். ஜீவதுரியம், பரதுரியம், சிவதுரி யம். உண்மைக்கிறுதியில் விளங்கக் கூடிய சத்தியமான உண்மையைக் கண்டு தெளியாத தத்துவப் போர்வையை யுடைய ஜீவன் இத்தகைய அறியாமையை அறிந்து நிற்பது பரமென்றுந் திருவருள் வல்லமையாலறிந்த அறிவே அறிவுமயமாய் நிற்பது சிவதுரியமென்றுங் கூறுவர். இதைத்தான் நமது சுவாமிகள் அனுபவார்த்த

மாய் முமூட்சுகளுக்குச் சொன்னதேயன்றி ஏனையர்க்
கன்று. பிராவிபறுக்கும் பிஞ்ஞகன் திருவருள்பெற்ற
திருவருட் பிரகாச வள்ளலார் சரிதையிலும் திருநாளைப்
போவார் சரிதையிலும் பின்வருமாறு காண்க.

துரியமலை மேலுனதோர் ஜோதிவள நாடு
தோன்றுமதி லுயர்நடஞ் செய்யுமணி வீடு
தெரியுமது கண்டவர்கள் காணிலுயி ரோடு
செத்தவ ரெழுவாரென்று கைத்தாளம் போடு.

மேருமலை யுச்சியில் விளங்குகம்ப நீட்சி
மேவுமதன் மேலுலகில் வீறுமாசாட்சி
சேருமதிற் கண்டபல காட்சிகள்கண் காட்சி
செப்பலரி தாமிதற்கென் னப்பனருள் சாட்சி.

அந்தமுப்பாழுந் தாண்டிவந்து அப்பாலே நின்றவர்க்கு
இப்பார்வை கிடையாது அப்பா திருநடனம்
ஆடுவார் தாளம்போடுவார் அன்பர்கூடுவார் இசைபாடுவார் இதை
கண்டாருங் கிடையாது விண்டாருஞ் சொன்னதில்லை
அங்கே சங்கையறவே நின்று பொங்கிவரும் பாலுண்டு
அங்கமிளைப் பாறிக்கொண்டு தங்கப்பொம்மை போலவே
நில்லுமே ஏதுஞ் சொல்லுமே ஞானஞ்சொல்லுமே யாதும்
[வெல்லுமே.

தரிசனோபநிஷத்தில் மனோவாக்கிற் கெட்டாத
தாய்ப் பரம்பொருள் வியாபகமெங்கு முளதென்று கருதி,
யாவற்றையுட் பரம்பொருள் வடிவமா யுணர்ந்து அதை
அப்பியாசிக்கின்றவன் நிற்குணனென்றுஞ் சொல்லுவர்.
மனம் விவகாரஞ் செய்யும் வரைக்கும் உருவக்கட
வுளையே பேணி அவ்வாறு உபாசிக்கின்றவனைச் சகுண
வுபாசியென்று சொல்லுவர். பிரம வடிவமாயுள்ள தன்
னிடத்தில் நாமரூப வடிவங்களனைத்தும் சொப்பனம்

போற்றோன்றுவது மித்தையாம். ஆத்மாகார விருத்திப் பிரவாகமே சின் மாத்திர வடிவமாய் நின்று சிந்தித் திருத்தல் சற்குரு தியானமென்றும் அவ்வகைத்தியானம் நழுவ, சொல்லிறந்த நிலைவடிவமே சமாதியென்றுங் கூறப்படும். இத்தகைய நிலையே நடுநிலையென்று நமது திருவெண்காடர் வாக்காற் காண்க.

ஒன்றென்றிரு தெய்வமுண்டென்றிரு வுயர்செல்வமெல்லா
மன்றென்றிரு பசித்தோர்முகம்பார் நல்லறமுநட்பும்
நன்றென்றிரு நடுநீங்காமலே நமக்கிட்டபடி
யென்றென்றிரு மனமே யுனக்கே யுபதேசமிதே.

முக்குணத்தாலும் மூவவத்தையாலுங் கட்டுப் படாதவனெவனோ அவனே சச்சிதானந்த சொரூபத்தை உடையவன். மனமகண்டாகார விருத்தியி லிருந்து பிரிந்த காலத்து மூவகைத் திருஷ்டி காணப்படும். அதாவது, விகாரம், ஏகதேசம், பூரணம். சிவன் வேறு நான் வேறென்பது விகாரம். சிவமே எல்லாவற்றிலும் ஊடு ஊடுருவி இருக்கிறதென்பது ஏகதேசம். சிவத்தைத்தவிர வேறில்லை யென்பது பூரணம். இதையே பலவிதமாக அத்வைத அனுபவிகள் விட்ட இலக்ஷணமென்றும் விடாத இலக்ஷணமென்றும் விட்டுவிடாத இலக்ஷணமென்றுங் கூறுவர். இதன் மூவகை இலக்ஷணமொருவாறு இக் கல்லாதகடையன் சிற்றறிவுக்குத் தக்கவாறு நிரூபிப்பது யாதெனில் (1) தேகம் நானல்ல தேகிநான், (2) தேகி நானென்றும் அது சச்சிதானந்த சொரூபமுடைய தென்றும் அதுவே குணமற்றதென்றறிந்து சொரூப சமாதியி லிருத்தல், (3) குணமற்றதென்று தெரிந்த அறிவாகிய நான் சிவமென்று தெரிந்து நிற்றலே யாம். இஃதன்றி நமது சைவாபி மானத்துக்குத் திலகமாகிய நமது

மூதாட்டியார் 'சிவத்தைப் பேணிற் றவத்திற்கழகு' என்பது மன்றி,

> "சிந்தையுணின்ற சிவனருள் பெற்றக்கால்
> பந்தமாம் பாசமறும்."

நாம் வழிபடு மார்க்கமாயுள்ள சைவாகமத்திற்கு முதல் நூலாயுள்ள விநாயகாகவலென்னும் நூலில் சமாதிக்குரிய தத்துவார்த்தத்தையும் பஞ்சாக்ஷர பான்மையையும் நன்குவிளங்குமாறு பின்னமெடுத்து கூறியதில் தெரியவரும்.

> "சத்தத்தினுள்ளே சதாசிவங் காட்டி
> சித்தத்தினுள்ளே சிவலிங்கங் காட்டி
> அணுவிற் கணுவா யப்பாலுக்கப்பாலாய்க்
> கணுமுற்றிநின்ற கரும்புள்ளே காட்டி
> வேடமுநீறும் விளங்க நிறுத்திக்
> கூடுமெய்த்தொண்டர் குழாத்துடன் கூட்டி
> அஞ்சக்கரத்தி னரும் பொருடன்னை
> நெஞ்சக் கரத்தினிலை யறிவித்துத்
> தத்துவநிலையைத் தந்தெனை யாண்ட
> வித்தகவிநாயக விரை கழல் சரணே."

இத்தகைய சுவாநு பூதிபெற்ற ஜீவன் முக்தரை ஆமைக்கு ஒப்பாவாரென்று அறிஞர் கூறுகின்றனர். ஆமையானது தண்ணீரில் வாழுங்காலத்து அருகில் வந்தவர்களைக் கண்டு, தன்னைப் பிடிப்பார்களென்று பயந்து தன் தலையை உள்ளே வாங்குவதுபோல் ஞானிகளும் பஞ்சேந்திரியத்தைப் புறமுகமாய் நோக்காது அகமுகமாய் நோக்கி அறிவாகார சொரூபத்திலிரண்டறக் கலந்து பேரின்பமடைதாய்ச் செறிந்து நிவாத தீபம்போன்ற திருவருளாகிய குருவருளினாலன்றாவே ஜோதியென்று

சந்ததமுஞ் சுகோதயத்தில் வாழ்ந்திருக்குஞ் சமாதியே ஒருவாறு இங்ஙனங் கூறப்போந்தது.

நமது நித்ய சொரூபாநுப ஸ்ரீமத் திருவெண்காடர் சுவானுபூதியிலுதித்த போராற்றலை ஆன்மாக்கள் வழிபடும் பொருட்டே பின்வருஞ் செய்யுளைப் பாடியிருக்கின்றார்.

நினைந்தனையற்றுப் பிரியமுந் தானற்றுச் செய்கையற்று
நினைந்ததுமற்று நினையாமையுமற்று நேர்ச்சிந்தனையுந்
தனந்தனியே யிருந்தானந்த நித்திரை தங்குகின்ற
வனந்தனி லென்றிருப்பே னத்தனே கயிலாயத்தனே.

ஆங்காரமு மடங்கா ரொடுங்கார் பரமானந்தத்தே
தேங்கார் நினைப்பு மறப்புமறார் தினைப்போதளவு
மோங்காரத் துள்ளொளிக்குள்ளே முருகனுருவங்கண்டு
தூங்கார் தொழும்பு செய்யா ரென்செய்வார் யமதூதருக்கே.

— கந்தரலங்காரம்

பின்னர் சமாதியின் முக்கிய இலட்சணத்திற் புகுவோம். எக்காலத்தும் அழியாத சித்து நானென்று மகிழ்ந்து நடுநிலை நழுவாமல் நின்று தரிசனஞ் செய்தல். அதுவுமன்றி சுத்தசுக நித்தியமாய்ச் சுயமாய் இருப்பதுவே சமாதிக்கோர் நிலை.

"விளக்கில்லை பல்பொருளு மில்லைவிழி யில்லை
துளக்கிருளு மில்லையெனச் சொல்ல — வுளக்கண்ணு
ளுள்ள படியறிந்தா லுன்பிறவி யில்லையுனக்
குள்ளபடி யீதென் றுணர்."

— வள்ளல்சாத்திரம்



# 9. இன்பம்

## திருவொற்றியூர்

அறம் பொருள் இன்பம் வீடு என்று நான்கு புருஷார்த்தங்களுள் வீடு என்பது மனத்துக்கும் வாக்குக்கும் மேற்பட்ட நிலையை உடையதாதலின் இங்கு வீடு என்பதற்கு மோட்சமென்று ஆன்றோர் கூறுவர். பந்தத்தினின்று விடுபடுதல் வீடேயாம். இது துறவறமாகிய காரணத்தின் பொருட்டே கூறப்படுவதன்றி இலக்கணவகையாற் கூறப்படாததால் அறம், இம்மை மறுமை வீடு என மூன்றுந் தருவதும்; பொருள், இம்மை மறுமை இரண்டையும்; இன்பம் இன்பமொன்றையே தருவதால் வீட்டையடைவதற்கு முக்கியமாய்க் கைப்பற்ற வேண்டியபொருள் இன்பமேயன்றி வேறொன்றில்லை. சாதாரணமாய் உயிரினுஞ் சிறந்தது உலகத்தில் இன்பமன்றி வேறுளதோ. அவ்வின்பம் இருவகையுளது. சிற்றின்ப பேரின்பமேயாம். இவற்றினனுபவத்தைக் கற்றறிவுடையோர் நன்கு விளக்கியிருப்பதால் செவ்வனே தெரியவரும். சர்வ வியாபக முதலிய இலட்சணங்கள் பொருந்திய கடவுளைத் தியானித்துக் கண்டனவெல்லாம் அப்பரமகுருவின் உருவமாகத் தோன்றும் வண்ணம் அவரை நிஷ்டை கூடித் தியானித்

தடைவதே பேரின்ப இலட்சணமாம். இவ்வாறு தியானமுற்று இரும்பைக் காந்தமிழுப்பதுபோலவே பர சிவத்தினுடைய கிருபா நோக்கமே மனதாகிய இருப் பைக் கவர்ந்துகொள்ளச் சக்தியுடையதன்றி மற்றோர் பொருட்கு அவ்வகைச்சக்தி கிடையவே கிடையாது.

ஒருவன் கல்வி கேள்விகளில், மிக்க வல்லவனு யிருந்தபோதிலும் ஆத்மானுபவத்திற்கு அக்கல்வி சிறிதும் பயன்படா. அதாவது சிதம்பர இரகசிய (சித் + அம்பரம்) தரிசனத்தினால் அதாவது பரமசிவ சச்சிதானந்த பூரணத்தி லமிழ்ந்திக் கிடத்தலே பேரின் பம் என்பதின் பெரும் பொருள். பின்வருஞ் செய்யுட் களாலும் நன்கறியலாம்.

"அறிவாரமரர் தலைவனை நாடிச்
செறிவார் பெறுவர் சிவதத்துவத்தை
நெறிதான் மிகமிக நின்றருள் செய்யும்
பெரியாருடன் கூடல் பேரின்பமே."

— திருமந்திரம்

"பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு."

— திருக்குறள்

இன்பம் என்னும் பொருட்குத் தன்னைத் தானறி வதேயன்றி வேறொன்று மில்லை. பஞ்சேந்திரியப் பேரு தவியினாலடைவதே பேரின்பமெனக் கொண்டால், அவ் வவ் விந்திரியங்கட் குரிமையுள்ள சக்திக்கு என்ன வென்று கூறுவோம் ? இவ்வாற்றல் எதன்பாலுளது ? இதற்கு முதற்பட்ட பொருளை ஆலோசிக்குமிடத்து என்னவெனச் சொல்லத் துணிவோம். பின்னர் குரு

முகத்தால் அறிவே சிவமென்று தெளிந்து இன்பமெனச் சொல்லத் துணிவோம். ஏனெனில் உலகப் பற்றறுத்துச் சுவானுபூதி நிலைகூடித் தானிரண்டறக் கலத்தலே இதன் உள்கருத்து. சர்வ வியாபகமுள்ள ஈசனைத் தன்னுளே காணப்புகுவோன் முயற்சி எவ்வாறென யூகிப்போமாயின் பஞ்சேந்திரியங்க ளனுபவிக்கும்படியான இன்பத்தை இவ்வாறென எளிதிலறிவதற்கு அசத்தர்களாயிருக்கும் பொழுது, இதற்கு மேம்பாடுடைய மனமிறந் தனுபவிக்கும் நிலையில் நிகழுமின்பம் பேரின்பமென்று எவ்வாறு அறிவது? இச் சிதாகாசவடிவில் நிகழும் ஒவ்வொன்றும் பேரின்பத் தொகுதியே. நாமிவ்வாறு பரிசோதிக்கு மளவில் நாமே நாமல்லவாய் விளங்கும் இக் காட்சிக்கே பேரின்பக் காட்சி யெனக் கண்டோர் கணித்த கட்டுரை.

"செய்வானுஞ் செய்வினையுஞ் சேர்பயனுஞ்சேர்ப்பவனு
முய்வா னுள னென்றுணர்."

"ஞானமிவ னெழிய நண்ணியிரு நற்கலநற்
பானு வொழியப் படின்."

"ஆரறிவா ரெல்லா மகன்ற நெறியருளு
பேரறிவான் வாராத பின்."

உடம்பின்மேல் அபிமானம் ஒருங்கே கைவிடுதல் கூடாதாயினும் நாளுக்கு நாள் மல நிறைந்த குடிசையாகிய உடலபிமானம் நீங்கி, உமக்குப் பதியாகிய அறிவு சிவத்தன்மைப்பெற்று வாழ்தலே இன்பமாகும்.

"மற்றுந் தொடர்ப்பா டெவன்கொல் பிறப்பறுக்க
லுற்றார்க் குடம்பு மிகை."

— திருக்குறள்

இவைகளிலெல்லாம் உடன் பட்டுள்ள மனம்தானன்று தன்வயமுமன்று என்று தெரிந்து அதனை நீக்கித் தன்னையும் அதனையுஞ் சேர்க்கப் பிரிக்கவல்ல சிவவெளி வியாபகமே இன்பம். கூடுதலுடன் பிரிதலற்று நிர்த்தொந்தமாய் உயிர்க்குயிராய் நின்று விளங்கா நின்ற திருவருளிலே போதத்தை ஒப்புவித்துச் சுட்டறிவு கழன்று நிற்குந் தொழில் நீக்கமே சுகமயமாய் விளங்கும் சிவம். சிந்தனை நீங்கிய பின்னும் மற்றோர் பொருளைச் சிந்திப்பதற்கு முன்னுமாய்ப் பொருந்தா நின்ற வெளியிலே மனதுண்டோவென்ன அதற்கு அங்கண் பற்றுதற்கோர் முன்னிலைப் பொருளுமின்றிச் சித்த சுத்தசிவ வெளியாய் நிற்பதே இன்பம்.

"மூடிமுன்னிருந்த தீபம் மூடினகும்பம் போனு
னீடு முன்னொளியா யெங்குநிகழ்ந்ததாங் காத்துமாவு
மூடிமுன் மறைந்திருந்தமும் மலம்விட்ட போது
நீடுதன் சொரூபமாகி நிகழ்ந்துதான் விளங்குமன்றே."

— சிவாகமார்த்ததரிசனம்

# 10. உண்மை ஒளியே சிவம்

## திருமுல்லைவாயில்

உண்மை யென்பது ஆதியாய் நின்ற அறிவுநிலா மண்டபத்தில் நிறைந்துலாவி தன்மயமாவது. குறியாகப் பார்த்தபனம் குறியொன்று மில்லாவிடத்து ஈற்றில் பயனடைவதே உண்மை ஒளியாம். மனங் கரைந்த விசும்பில் உருவமொன்றில்லை, உணர்வில்லை, தனக்கோர் உருவில்லை, உறக்கமு முணர்வுமில்லை, பசி தாகமுமில்லை, ஆகையால் பிறப்புக்கிடமில்லை. உலகத்திலுள்ள உயிர்க்கெல்லாம் ஈசன் நிலவுபோல் நிற்பதுவே உண்மை ஒளி. அளவிறந்த ஆதியே உண்மை ஒளியாம். முன்னர் தோன்றிய வரிவடிவம் பின்னர் உச்சரிப்பால் ஒலி வடிவாகி ஒலியி னீற்றில் விளையும் அதாவது சத்தத்தினுள்ளே சதாசிவங் காட்டு மொளியே உண்மை ஒளியாம். இங்ஙனம் விளக்குஞ் சிந்தையான் மெய்ப்பொருளைக் கண்டு ஊக்கமற்ற சிவானந்தப் பேறுண்டு, இராப் பகலிலா விடத்தில் சத்தியாம் சந்திரனோடொன்றி, பாலின்கண் நெய்போற் பரந்தெங்கு நிற்பதுவே பரமசிவம். இங்ஙனமே சிவமென்பது ஒளியென்று கொள்க. அகாரமாகக் கண்ட அறிவு அகண்ட வியாபகத்தில் அனைத்துருவ மெல்லாம் அறக்கெடுத்து நின்ற வியாபகமே பரமசிவம். பிருதிவிக் கிடங்கொடுத்த ஆகாசம் சர்வத்தையுந் தன்னுளடக்கிச் சர்வமும் தானாய்ச்

சின்மாத்திரமா யிருப்பதுவே சின்மயமாம். பிருதிவியில் பிறந்த உயிர்க்கெல்லாம் தாஞகி நின்ற விண்ணே சிதாகாசமான சிதம்பரமாம். அந்தர்முக வியாபகத்தினுள்ளே விளங்குகின்ற சுடர் மின்மினிபோல நாளடைவில் கண்ணகத்தே நின்று களிதந்து உண்ணிறைந்து நின்ற ஒளியே உண்மை ஒளியாம். சுத்த மனமாகி அதாவது சங்கற்பாதீத அனுபவத்தில் நான்தானென்று பிரிவுபடா ஐக்கிய நிலையில் நிகழும் தராசு நுனியெ நடுநிலை யென்றும் அந்நடுநிலைக்கு நாயகஞன பிராணவாயு பொருந்தின விடமே சிவ ஒளி என்றும் அச்சிவ ஒளி விளங்கும் வடமுகமே வட சிதம்பரமென்றுஞ் சித்தியெலாம் தரும் அம்பரமான தன்னைச் சூழ்ந்து (The Spiritual Light in Arutpa" என்னும் பனுவலில் காண்க.) நின்ற சுடரைத் துளங்காமல் நோக்கில் சர்வ சித்திகளைச் செய்யவல்ல வள்ளலென்று பேர்வகிக்கும் உண்மை ஒளியான சிவமன்றே நம் அருட்பெருஞ்சோதி ஆண்டவனும். சங்கற்ப மிறந்தக்கால் மனமிறக்கும். மனமிறந்தக்கால் சிந்தனை அறும். சிந்தனை அற்றக்கால் சிவம் விளங்கும். இதுவே தூய உடம்பாக்கிப் பற்றற்று நின்ற பழம்பொருளாகிய ஆன்ம ஒளியிற் சேர்த்து வைக்கும். இவ்வாறு கூட்டுவிக்கும் அன்பே அருட் குருவாம்.

> "சாகா திருந்த தலமே மவுனமது
> ஏகாந்த மாக விரு."

> "வெளியில் விளைந்த விளைவின் கனிதான்
> ஒளியி லொளியா யுறும்."

> "மறவா நினையா மவுனத் திருக்கில்
> பிறவா ரிறவார் பின."

# 11. சொரூப நிலை



## சென்னை

### முதல் பௌர்ணமி

**1. ஆன்ம விலக்கணம் :**

உண்மையில்லா உலகம் உயர்ந்தோர் மாட்டு உணர்வாகக் காணப்படுகின்றது. இவ்வுணர்வே அறிவென்று சொல்லுமிடத்துத் தத்துவம்போய் இவற்றின் மேற்றோன்றியுந் தோன்றாநின்ற கேவலாவத்தையும் நீங்கி நின்றவிடத்து அவைகளைத் தள்ளி யறியவந்த நிமித்த காரணமே திருவருளென்பர். இவ்வரிய திருவருளைச் சிறிதுகாலஞ் சென்ற பிறகு நின்மலமாயுள்ள பரையே தானாகி, இதைத் தன்னுள் அறிந்தவிடத்துத் தானாகிய காண்பானும் முத்திரையாகிய காக்ஷியும் தற்சுதந்தரவறிவு நீங்கி, அப்பரை வியாபகபோதமே ஆனந்தானுபவம் அதாவது எனதென்று எழும் ஆன்மாவின் தற்சுதந்தரங்கெட்டு, சிவமாகிய ஆனந்தத்திற் காண்பானுங் காக்ஷியுமற்றதே. அதாவது சிவத்தில் தானிரண்டறக் கலந்தோமென்கிற எண்ணமிறந்த இடமே சுகாதீதம். முன் சொல்லிப்போந்த சகல கேவலத்தில் மறந்தவனும் அவ்விடயங்கள் தன்வயப்பட்டு நீங்காவிடத்து அவற்றில் ஆனந்தமே பின்பற்றி அதிலே அழுந்தி

ஆன்ம சந்தோடம் பிறக்கும்போது இச்சந்தோடம் அவ்வருளா லுண்டாயிற்றென்று ஆத்மா வநுபூதியாகிய நமது மணிவாசகசுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய கோட்பாட்டால் நன்குவிளங்குமென்பது திண்ணம். (அவனருளாலே யவன்றாள் வணங்கி) இத்தகை நினைப்பதற்கரிய சிவஞான நிட்டையில் சதா தேர்ச்சியுடையவர்கள் ஜீவன் வேறு, சிவன் வேறென்று சொல்லுங் கற்பனையான சொல்லைக்கடந்து குருநாத விசுவாசம் அதாவது ஆன்றோர் வாக்காற் கட்டுண்ட சற்சீடன் ஊசியும் நூலும் போலவே ஒற்றுமைப்பட்டு, தண்ணீர் கலந்த பால்போல அகண்டாகார சொரூப விருத்தியிற் கலந்தலே ஆன்ம லிலக்கணம்.

போக்கும் வரவு மிரவும் பகலும் புறம்புமுள்ளும்
வாக்கும் வடிவு முடிவுமில்லா வொன்று வந்துவந்து
தாக்கு மனோலயந் தானே தருமெனைத் தன்வசத்தே
யாக்குமறுமுக வாசொல்லொ ணாதிந்த வானந்தமே.

— கந்தரலங்காரம்

நானே யதுவோ வதுநானே நானதுவோ
ஞானே தயமோ நாதாந்தமோ — மோனமோ
சுத்தமோ சூனியமோ தோற்றுஞ் சுபாவநிலை
யித்தனையு மல்லவா மே.

— சொரூபசாரம்

ஆசாரிய சுவாமிகள் பிரக்ஞானப்பிரமம், அகம் பிரம்மாஸ்மி, தத்துவமஸி, அயமாத்மா பிரம்மமென்னும் நான்கு மகாவாக்கியங்களைச் சீடனறிவுக்குத் தக்கபடி உபதேசிப்பதை நாம் கண்டுங் கேட்டுமிருக்கிறோம். இப்போது அயமாத்மா பிரமமென்னும் விஷயத்தை எடுத்துச் சொல்லப்போகிறோம். ஏனெனில் மனோ விகார

மாகிய சலனம் ஐயறிவன்றி மெய்யறி வாகிய ஆத்மா அல்ல. சிற்சிலர் ஆத்மா வேறு, சிவம் வேறென்று சொல்லுஞ் சொல் முரணே முரண். ஏனெனில் சர்வ வியாபகமாயுள்ள பரமாத்மா அருள் நிறைவிளக்காயும், சுயம்பிரகாசமான மோக்ஷவடிவமே சர்வ வியாபகமுள்ள சிவமாயும் அன்பினூற் கட்டுண்ட ஆத்மாவை அருளாகிய ஆக்கிரணசக்தியால் தன் வயப்படுத்துவதே அயமாத்மா பிரமமென்றுஞ் சொல்லுவர். இரண்டென்று சொல்லப் போந்தவிடம் ஆகாசபுட்பம்போலென்க. ஒருவன் நரம் புக் கருவிகளுடைய உன்னத ஓசையைக் கேட்டுச் சந் தோஷப்படுங்காலத்துந் தானே அது வாகாரமாய்த் தானேயறிந்து தானே இன்பமாய்த் தானே ரமித்து ன.

அதை வெளியில் பிறர்க்குச் சொல்லுமிடத்து நான்தான் கேட்டுச் சுகப்பட்டேனென்று வெளிவந்துளறு மவஸ்தையே இரண்டென்கின்றது. பஞ்சமலத்தினுலாக் கப்பட்ட இச்சரீராபிமானம் உள்ளளவும் இரண்டென் கிற அவத்தை ஒழியா. இதன் முக்கிய குறிப்புகள் எல்லாம் "அருட்குரு" என்னும் பனுவலில் நன்கு விளக்கி இருக்கின்றது.

தலங்க டோறுஞ்சென் றவிடை யமர்ந்த
தம்பி ரான்றிருத் தாளிணை வணங்கி
வலங்கொ ளும்படி யென்னையுங் கூட
வாவென் கின்றனை வாழியென் னெஞ்சே
யிலங்க டோறுஞ்சென் றிரந்திடு மவனே
யென்னை யுன்னையு மீர்க்குவ னதற்கு
நலங்கொ ளுந்துணை யாதெனிற் கேட்டி
நமச்சி வாயங்கா ணும்பெறுந் துணையே.

— திருவருட்பா

## இரண்டாம் பௌர்ணமி

**2. பரிபூரணன் :**

மனமானது ஒரு பொருளோடுந் தொடர்வின்றி வெறுஞ் சூனியத்தி லுண்டாகிய பேரானந்தத்தைக் எவ்வாற்றானுஞ் சொல்லால் அளக்கக் கூடாததைப்பற்றி சொல்லிறந்த விடமென்றும் முப்பாழுக் கப்பாலாய்த் தோன்றுகிற முதற்பாழென்றுங் கூறுவர். மகா காரணப் பொருளைப் பெற்ற ஒருவன் தான் ஏகாந்த ஸ்தானத் திலிருந்து மனத்தைக் கண்டத்தில் அசைவற நிறுத்தி நினையாமல் நினைக்க அதிலெழுஞ் சுகத்தினு லறிவு தனியே நின்றுங் காரியகாரணங்களைக் கொண்டு அறிவை அறியவில்லை அறிந்தேனென்ற சுத்த உபாதி நீக்கமே தானு யிருத்தலென்னும் உள்முக நோக்கும் உத்தம ருரைக்கும் வார்த்தை யன்றோ ! கனுவடத்தில் கள்ளி ருப்பதைக் கண்ட தேனீக்களெப்படி அதிலுண்டான இனிப்பையுண்டு தானதிலே இறப்பதுபோல, போத மாகிய அறிவானந்தத்தில் இடைவிடா தின்பத்தில் மூழ்கித் தற்போத மழிந்து அதாவது தான் நானென் கிற சொற்பேதம் நீங்கியிருப்பவ னெவனோ அவனே பரிபூரணன். இத்தகைய யோகமே எனது குருநாதன் பரையோக மென்று கூறியுள்ளான் :—

பரவெளியே நடுவெளியே யுபசாந்த வெளியே
பாழ்வெளியே முதலாக வேழ்வெளிக்கப் பாலும்
விரவியமா மறைகளெல்லாந் தனித்தனிசென் றளந்து
மெய்யளவு காணுதே மெலிந்திளைத்துப் போற்ற

வுரவிலவை தேடியவவ் வெளிகளுக்குள் வெளியாய்
யோங்கியவவ் வெளிகளைத் தன்னுள்ளடக்கு வெளியாய்க்
கரையறநின் றோங்குகின்ற சுத்தசிவ வெளியே
கனிந்தநடத் தரசேயென் கருத்துமணிந் தருளே.

— திருவருட்பா

இமையா நாட்டத்துடன் தானாகிற அறிவானந்த சொரூபஞ் சுபாவமான நினைவுக்கு வேறாய்த் தோற்று கிறபடியாற் பின்னரது சடமெனப்படும். சின்முத்திரை யில் விளங்கக்கூடிய குருநாத சொரூபம் நாமரூபத்தை நீக்கித் தன்னைச் சித்தென்றறிந்து சித்தாய்ப் பாவித்துச் சின்மாத்திர சொரூபமே ஞானாகாசமென்றுஞ் சிதா காசமென்றும் அதற்குமேல் நிகழு மனுபவத்தை நாடித் தானின்ற நிலையைத் தழுவுமறிவு அழிந்த விடத்தே பிறப்பு இறப்பு நீங்கின விடமென்றும் இத்தகைப்பெற்ற வள்ளல் வரிட்டநிலையை அடைந்தாரென்றும் அவரே சர்வக்ஞரென்றும் ஆன்றோர் கூறியிருக்கின்றனர். ஆகம வாயிலாகவும் அனுபவ முறையாலும் நமது திருவருட் பிரகாச வள்ளலா ரருட்பா இக்காலத்து ஆன்மாக்கள் வழிபடும் பொருட்டுச் சுவானு பூதியி லுதித்தவாறு எழுதிவைத்த கைம்மாறுக்கு நாம நன்றியுள்ளோமில்லை.

எவ்விடத்து மெவ்வுயிர்க்கு மிலங்குசிவ மொன்றே
யென்னுணை யென்மகனே யிரண்டில்லை யாங்கே
செவ்விடத்தே யருளொடுசேர்த் திரண்டெனக் கண் டறிநீ
திகைப்படையே லென்றனக்குச் செப்பியசற் குருவே
அவ்விடத்தே யுவ்விடத்தே யமர்ந்ததுபோற் காட்டி
யங்குமிங்கு மப்புறமு மெங்குநிறை பொருளே
ஒவ்விடச்சிற் சபையிடத்தும் பொற்சபையி னிடத்து
மோங்குநடத் தரசேயென் னுரையுமணிந் தருளே.

பரமாகிச் சூக்குமமாய்த் தூல மாகிப்
பரமார்த்த நிலையாகிப் பரத்தின் மேலாஞ்
சிரமாகித் திருவருளாம் வெளியா யான்ம
சிற்சத்தி யாய்ப்பரையின் செம்மையாகி என்றும்
வந்தவுப சாந்தமதாய் மௌன மாகி
மகாமௌன நிலையாகி வயங்கா நின்ற
வந்தமிலொரும் பதமாய்த்தற் பதமா யொன்று
மசிபதமா யதீதமா யமர்ந்த தேவே என்றும்

உருவாகி யுருவினிலுள் ளுருவுமாகி யுருவத்தி
லுருவாகி யுருவுள் ளொன்று
யருவாகி யருவினிலுள்ளருவமாகி யருவத்தி
லருவாகி யருவுள்ளொன்றாய்க்
குருவாகிச் சத்துவசிற்குணத்ததாகி குணாகிதப்
பொருளாகிக் குலவா நின்ற
மருவாகி மலராகி வல்லியாகி மகத்துவமா
யணுத்துவமாய் வயங்குந் தேவே.

— திருவருட்பா

மூன்றும் பொன்மொழி

3. பஞ்சாக்கர நிலை :

முன்னே சொல்லிப்போந்த நான்கு வாக்கியங்களுள் ஒவ்வொன்றுஞ் சரியை, கிரியை, யோகம் ஞானமென்பதைக் குறித்ததே. அவ்விதயோகம், மனத்தைப்பிடித்து அதாவது மனத்தைத் தூய்மைப்படுத்துவதற்கு மந்திரமூலமாகத் தந்திரங்காட்டுந் தகைமையே. சரியை, கிரியை, யோகமென்பது தொழிலைப்பற்றி யல்லாது வேறு எதன்பொருட்டாம்? மனத்தின் பொருட்டன்றோ? ஞானமென்பது மனத்துடனே சம்பந்தப்பட்டிருப்பதா? இது மனமிறந்த நிலையன்றோ! அதை ஆன்

ஞோர் நெருப்பாறு மயிர்ப்பாலமென்று நித்தியா நித்திய வஸ்து விவேகம்பெற்ற நின்மல சாக்கிரமுடைய நிபுண சிரோண்மணிகள் கூறியுள்ளதை வாசித்திருக்கிறோம். ஆனால் பழக்கமெத்தகையோ ? ஒவ்வொரு உள்ளமே சாக்ஷி. இஃதன்றி முன்னான்று சொல்லிவந்த சரியை கிரியை யோகம் தொழிற் சம்பந்த முடையதென்று எதன்பொருட்டு ஆளப்பட்டது ? மந்திரமென்னுஞ் சொற் களாற் றன்வயப்படுத்துந் தந்திரம், அதாவது பஞ் சாக்கர மூலமாக நவசிவாயமெனும் ஐந்து அட்சரத்துள் விளங்கு மிலக்கணமேயாம். நகாரமாகிய திரோதை இது திரையட்சரமென்றும், நான்முக ரூபமாய் விளங்கு மட்சரமென்றும், மகாரமென்பது மாலக்ஷரமென்றும், (மயக்கத்தைத் தருகின்றதும்) சிகாரமாகிய பதியட்சர மும், வகாரமாகிய அருளட்சரமும் அதுவே (பரையட் சரமென்றும்)யகாரமோ ஜீவாட்சரமெனறுஞ் சொல்லுவர். இவ்வட்சரத்தில் ஒவ்வொன்றுந் தத்தம் தாதுவை நோக்குமிடத்து இதனி லக்கணம், சரியை, கிரியை, யோகவழிபாடுள்ள சுத்த ஆன்மாக்களுக்கே அத்தியா வசியகமென்று சொல்லப்படும். இதுகாறுங் கூறிப் போந்த ஒவ்வொரு எழுத்தின் முடிவான நிலையை ஒரு வாறு கவனிக்கப்புகுவோம். நகாரமாகிய பிரம்மாக்ஷரம், வகாரமாகிய அருளிற் கூடுவதும், மகாரமாகிய மலத்தை யுடைய விட்ணு அதாவது திதியைத்தருகின்ற சக்தி தானென்கிற ஜீவசாட்சியாகிய யகாரத்துடன் கூடி யொடுங்குவதும் அந்த வகாரயகார தாதுவையுடைய இரண்டக்ஷரமும் பதியட்சரமாகிய சிகாரத்திலொடுங் கும் பின்னரிதன் கூட்டுறவு இறுதியிலெத்தகையதென விசாரிப்போம். நகாரமாகிய கர்மசதாக்யமாயதாவது பிருதிவி சொரூபமும் மகாரமாகிய அப்பு சொரூபமும்

யகாரமாகிய தேயு சொரூபமும் வகாரமாகிய வாயு சொரூபமுஞ் சிகாரமாகிய ஆகாச சொரூபமே என்றறிக. மேற்கூறிய மும்வித யோகத்தின் பயன் பின் வருமாறு ஆன்றோர் வாக்கால் காண்க :—

ஒன்றுகண் டீருலகுக்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டீருடலுக் குயிரானதும்
நன்றுகண் டீரிது நமச்சிவாயப் பழம்
தின்று கண்டார்க்கது தித்தித்த வாறே.

அஞ்சு நடுவே யழியாத் தலங்காட்டி
நெஞ்சு நடுவே நிறுத்தின னென்னந்தி
பஞ்சாக் கரத்தை பகர்ந்து பதிகாட்டி
யஞ்சலி ரண்டை யறுத்தன னந்தியே.

என்பதினாற் சிவாய வென்றாயிற்று.

அஞ்சுகவஞ்செழுத் துண்மை யறிந்தபின்
னெஞ் சகத்துள்ளே நிறையும் பராபரம்
வஞ்சகமில்லை மனைக்கு மழிவில்லை
தஞ்ச மிதுவென்று சாற்றுகின்றேனே.

வாசிவாயென்று வாசியை வைத்து
வாசியோடொன்ற வகையறிவா ரில்லை
வாசியோடொன்ற வகையறி வாளர்க்கு
வாசியோடீசன் மகிழ்ந்திருந் தானே.

நாயோட்டு மந்திரம் நான்மறை வேதம்
நாயோட்டு மந்திரம் நாதனிருப்பிடம்
நாயோட்டு மந்திரம் நாதாந்தசோதி
நாயோட்டு மந்திரம் நாமறியோமே.

— திருமந்திரம்.

அஞ்செ ழுத்தினி லொருபுடை யரும்பதி யமரும்
வஞ்ச முற்றுள வொருபுடை பாசமாய் வதியுந்
துஞ்ச லின்றிய வொருபுடை பசுவெனத் துலங்கும்
அஞ்செ ழுத்தினின் மும்முத லறிந்தவர் பிறவார்.

— பஞ்சாட்சரப் பதி பசு பாச விளக்கம்

அஞ்செழுத்தி னுண்மையது வானவப்பொருளை
நெஞ்சழுத்தி யொன்றாகி நிற்கு நாளெந்நாளோ.

— தாயுமான சுவாமிகள்

இல்லக விளக்கது விருள்கெடுப்பது
சொல்லக விளக்கது சோதியுள்ளது
பல்லக விளக்கது பலருங்காண்பது
நல்லக விளக்கது நமச்சிவாயவே.

— திருநாவுக்கரையர்

சரியையோர் நான்குங் கிரியையோர் நான்குஞ்
சாற்றிடும் யோகமோர் நான்கும்
புரியவும் பதங்கள் பொருந்தவு மெனது
புந்தியி லாசைசற் றறியேன்
பெரியதோர் ஞான நான்கினு மாசை
பெற்றிலேன் முத்திபெற் றிடவும்
உரியதோ ரிச்சையெனக் கிலையென்ற
னுள்ளநீ யறிந்ததே யெந்தாய்.

ஆகையால் நம் சிவம் அருட்பெருஞ்சோதி ஆண்டவன் ஞானதீதனென்றும் சுயம்பிரகாசனென்றுங் கூறுதற்கு யாதும் ஐயமில்லை. இவர் எக்காலத்தும் எவ்வமயத்தும் நடுநிலை நீங்காமல் சதா விவகாரஞ் செய்யும்போதெல்லாம் உயிர்க்குயிரா மொளியிலே நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து கலந்து கலந்து அனுபவித்த

போராற்றலைத் தானடைந்ததுமன்றி ஏனையோரும் அவ்வகை அறிந்துய்யும் வண்ணம் பாடிய நம் சற்குரு நாதனன்றோ நாம் வணங்கும் கடவுள்.

உடைய வம்பலத்தி லொருவனே யென்ற
னுயிர்க் குயிராகிய வொளியே
கடைய னனைவில் நடுங்கிய நடுக்கங்
கணக்கிலே சிறிதுறுங் கனவி
லிடையுறு நடுக்கங் கருதவுஞ் சொலவு
மெண்ணவு மெழுதவும் படுமோ
நடையுறு சிறியேன் கனவுகண் டுள்ள
நடுங்கிடா நாளுமொன் றுளதோ.

— திருவருட்பா

சரிதை யாதியொரு மூன்றுசவுபானங்கள் பயனில்லை
அரியும் பிரமனுமாலு மறிதற்கரிய தாரணங்கள்
உரையுமில்லை முடிவறியா வொன்றாய் நின்ற தனிஞானப்
பொருளையருளும் வெளியுமிலாப் போதமருவிக்களி யென்
[றான்

வேறு

சரிதையின் றொழிலினாலுஞ் சற்கிரியையினும் யோகம்
புரிதரு முயற்சியானும் பொருந்தொணாதென்பர் மேலோர்
உரிய தேசிகனுரைக்கு மொருமொழி யுண்மையாலே
அரிய மெய்ஞ்ஞான வீடிங்கடைவது திண்ணமாமே.

— பிரமகீதை

சிகரமும் வகரமுஞ் சேர்தனி யுகரமும்
அகரமுமாகிய வருட்பெருஞ் சோதி
வகார வெளியிற் சிகாரவுருவாய்
மகாரத் திருநடநான் காணல்வேண்டும்
விகாரவுலகை வெறுப்பாயோ தோழி
வேறுகி யென்சொல் மறுப்பாயோ தோழி.

— அருட்பெருட்சோதி அகவல்

## நான்காம் பௌர்ணமி

### 4. மோனமேன்பது ஞானவரம்பு :

பிறகு நான்காவது ஞானம் எத்தகையதென யூகித்துப் பார்ப்போம். (மோனமென்பது ஞானவரம்பு) என்று ஆன்றோர் வாக்கால் தெரிந்திருக்கிறது. அதற்கு யாம் பாடுபடாத காரணமென்னை? சரீரம் பஞ்சபூதங்களா லாக்கப்பட்டதென்று யாம் நன்கறிந்திருக்கிறோம். இதன் சார்பாகவே அவத்தையிற் கட்டுண்ட முப்பத்தாறுங்கூடி நிற்க சாக்கிரத்திலுனது அறிவில் விகற்பமாய்த் தோன்றுவது சகலமென்றும் மயக்கமாய் வந்தடுப்பது கேவலமென்றும் இந்த சகலத்தையுங் கேவலத்தையும் பாங்குடனே சீர்தூக்கி நியதிகளைந்த தன்மையே திருவருள் தரிசனம். இது அதுவென்று கழன்றவிடமே கதிரவன் சந்நிதியில் தற்சேட்டை யற்றிருந்த விளக்குப்போலும் மத்தியான காலத்திற் பஞ்சவன்னங்களையும் கவராத படிகம்போலும் விளங்குவதே ஞானமென்று சொல்லுவர். ஞானநூற்களில் ஆன்மாவானது நினைப்பு மறப்பு (அதாவது) சங்கற்பம் நீங்கி நின்றவிடமே துரியமென்றும் இத்துரியமே ஜோதிவளநாடென்று சொன்ன நம் தந்தையாகிய தனியருட்பிரகாசனுயர் வாசகமே உள்ளொளி விளக்க வந்த உயர்நூல். அகண்டபரிபூரண சச்சிதானந்த சுயம்பிரகாசமாய் விளங்கும் உள்ளொளியே ஆன்மாவென்றும் அவ்வான்மாவே சிவமென்றும் அருட்பிரகாசமென்றும் அருளானந்தமென்றுஞ் சொல்லுவர். தானே தானாகிய துரியானுபவத்தி லறிவு தானாய் விளங்குகிறபடியால் அறிவென்கிற எண்ணம் நீங்கித் தானாயிருந்து நிரதிசய

னந்த விளக்கத்தில் நிற்பதே உணர்வின்முடிவு. இதுவே ஞானவரம்பு. இஃது எப்படியென்றால் தேற்றாங் கொட்டையானது தண்ணீரினுடைய அழுக்கைப் போக்கிக் குடிப்பதற்குத் தெளிந்த தண்ணீராக்கித் தானுமதிலே கலந்து விவகாரஞ் செய்வதொக்கும். பின்வரும் அறிவுடைய கண்ணுடையார் சுத்த சுவானுபூதியின்கண் சுகப்பேற்றால் விளைந்த செய்யுளாற் காண்க.

புத்தகப்பேயே யிந்தச்சிற்றிலைக் கீழ்போதென்ற
சித்தன்மொழியிந் நூற்குச் சித்தாந்தம் — வைத்த
பாப்பெலா நீத்துப் பழைய சிவந்தோன்று
யிருப்பன்றோ வாவிக ளியல்.

எல்லாவுயிர் கட்குமின்பங் கொடுத்தலால்
எல்லாஞ் சிவனையே யெண்ணலால் — எல்லாஞ்
சிவனுரு வேயாமாற் றெவிட்டாப் பேரின்பஞ்
சிவனுருவ மென்றுணர்விற் றேர்

ஆகாயந் தன்னையளக்க மரக்காலெனை
வாகாயமம்மரக் காற்குள்ளிருக்க — வாகாயங்
கண்டாயே லந்தக்கருத்தை கருத்தாகிக்
கண்டா லதுவே கதி.

மெய்யைப் பொய்யென்றான் வெளியைநல்லவீடென்
சைவத்துறை காழிச்சம்பந்தன் — ஐயமற றான்
நின்போதம் போமிடத்தே நீயேசிவமென்று
னென்போ தத்துள்ளே யிருந்து.

அறிவா லறியப்படும் பொருளேயாகிற்
பொறியா லறியப்புகாவோ — பொறியாரக்
கண்டதெலாமாயை யெனக்கண்டித்தான் மெய்ஞ்ஞான
முண்டதிருச் செவ்வாயா னுற்று.

— வள்ளலார்

## ஐந்தாம் பௌர்ணமி

### 5. பக்தியுள்ளவர் :

துக்க மிகுதியே தூய்மை நிலைக்கு வழி :— ஒருவன் தான் சகத்தைப் பொய்யென்றறிந்தபின் அதாவது சகத்திலுள்ள பல்வகைப் பொருள்களும் இறுதியில் யாதும் பயன்படாதென்று தெரிந்த பின்னர் காலை நேரத்திலாவது அல்லது மாலைப் பொழுதிலாவது ஏகாந்தமாய் நான் பிறந்த நாள்முதல் இன்றையதினம் வரையில் ஏதாவது பயனுள்ளதைச் செய்தேனா வென்று தீர்க்காலோசனை செய்தால் சங்கற்ப வடிவமாயுள்ள பெண்டு பிள்ளை முதலிய பதார்த்தம் யாவற்றிலும் வைத்திருக்கும் ஆசைகுன்றி, குணங்குறியற்ற இன்பாகாரவடிவானுபவத்தில் சுகிப்பன். இச் சுகவடிவம் முன்புதோன்றியுள்ள துக்கத்தை நீக்கிச் சுகத்துக்கேதுவான ஒன்று தன்னுள் விளங்கியும் விளங்காமலு மிருக்கும். இத்தகைய ஆராய்ச்சி நாளடைவில் நானெனு மகந்தையாகிய விசேஷணகுணமாறி விசேஷியமாகிய தான் அருட்சிவ வடிவாய் விளங்குவன் (உ-ம்.) இந்த வீட்டைக் கட்டினவன் யார் என்று வினவினால் நான்தான். இந்தப் புத்தகம் எழுதினவன் யார். நான் தான். நான் விசேஷணம், (அறிவு நீங்கலாக வுள்ள பதார்த்தம் யாவும் சங்கற்ப வடிவாதலால் தோன்றியழிவதே.)

தான் விசேஷியம் (அறிவே கற்பனாதீதன், அழிவில்லாதவன், நித்தியானந்தன்). காற்றிலலையாத தீபம் தனக்குத்தானே பிரகாசித்துக் கொண்டு தன்னருகிலுள்ளவற்றை யெல்லாம் பிரகாசிக்குஞ் சோதியே ஆத்து

மாவாம். இன்னும் வாசுதேவ மனனம் என்னுஞ் சுருதிகளாலும் ஆத்மா ஜீவசொரூபமாய்த் தேகத்தினுட் பிரவேசித்திருக்கிறது ஆசையின் நிமித்தமே. இவ் விச்சை மித்தையே.

வெளியென்னுங் ககனந்தன்னை விரவியமா விண்ணென்றுங்
கொளுவிய கடவிண்ணென்றுங் கூறிருட் கார்விண்ணென்று
தெளிகட ஜலவிண்ணென்றுஞ் செப்புதல் போற்சைதன்ய
மளிதரு பிரமமாத்மா வமீசன் ஜீவனுமே.

## அரும் பொருள்

6. சச்சிதானந்தன் :

சச்சிதானந்தன் :— சங்கற்ப வடிவமாகிய மனம சத்வாம்ஸமாகிய ஜீவனது நினைப்பே. (இதன் முக்கிய கருத்துகளை அருட்சோதி மலர்கள் நான்கிலும் விரித்துரைக்கப் பெற்றுள்ளது.) நினைவு காற்றினெழுச்சி. இது சூட்சுமமாதலால் ஸ்தூலத்துக் காதாரமாயுள்ள ஜீவனது உதவியைக் கொண்டு பல விவகாரங்கள் செய்து கொண்டே ஒய்வின்றிச் சதாகவலைபுற்று அத்திருப்தியை அடையும். இத்தகைய மனம் சீவ சங்கற்பமாதலினால் மனம் எப்பொழுது சீவனிலடங்குகிறதோ அச்சமயத்தில் அசுத்த மனமென்னுந்தன்மை நீங்கிச் சுத்த மயமான ஞான வடிவமே துரியவடிவமென்றும் தூய்மை நிலையுடைய அனுபூதியர் கூறியுளார் — அகண்ட வடிவமான துரியாதீதப் பரம்பொருளென்னுங் காந்தம், துரியமென்னும் ஊசியைத்தானே இழுத்துக்கொண்டு தன்னிடத்தில் லயஞ்செய்து கொள்ளற்போலவும், இரும்புண்ட நீரைப்போலவும், தோன்றுங்காலையி விரண்

டாகத் திருட்டிக்குப் புலப்பட்டு பின்பு ஆராய்ச்சி யில் சேர்க்கைப்பொருள் முதற்பொருளுடன் கூடித் தானுகி நிற்பது. சர்வபரிபூரண அகண்ட வியாபக மான சிதாகாஸத்தில் சித்ரூபமான அறிவு ஆபாசமாக இச்சையினாலே தேகமென்னும் இல்லத்தில் வாழ்வதை ஆலோசிக்குமளவில் தானே தானுயிருந்த சுகத்தை மறந்த மறப்பன்றோ! இவ்வவல மறைப்புத் தோன்று மிடத்து அறிவில்லை. இத்தகைச் சலிப்புக்கு ப்ரமேயம் என்றும் வேதாந்த அனுபவிகள் சொல்லுங் கொள்கை. இன்னுங் கள்ளனில்லாக் கட்டையைக் கட்டையென்று தீர்மானிக்காமல் கள்ளனென்றே நிர்மானிக்கும் அறிவு ப்ரமிதியென்றுஞ் சொல்வர். மேற்சொல்லிப் போந்த துரியம் மூன்றுவகையுள (1) சீவதுரியம், (2) சிவ துரியம் (3) பர துரியம் (1) அறிவு போதமாகிய சீவனைச் சத்தென்றும், (2) அறிவிறந்த போத நிலையை யுடைய சீவனுக்குச் சித்தென்றும், (3) அறிவாகார நிலையயே சிவாகாரமாய் விளங்குஞ் சீவனுக்கு ஆனந்த மென்றனுமாம். நடராஜ சற்குரு! ராமலிங்கஜகத்குரு!

## ஏழாம் பௌர்ணமி

### 7. சிவநிலை :

சிவ நிலையடைவதற்கு வழி :— உபாசனமூர்த்தி விசுவாசமே பக்தி. ஒவ்வொருவன் தனதிஷ்ட தேவ தையினிடம் நாட்டம் வைத்து சதா ஊன்றியிருத் தலே பக்தி. பக்தி என்பது மன உருக்கம், அல்லது நெகிழ்ச்சி. அன்பின்வசப்பட்ட ஆன்மா சதா கசிந்து கசிந்து கடவுளுடைய பெருமையும் தரத்தையும் நாம் என்று சொல்லப்படும் ஊத்தைச் சரீரத்தின் சிறுமை

யும் இதனது தரத்தையும் ஊன்றி விசாரித்தலே சீவர் களிடத்தில் துவேஷமும் பகையும் நீக்கும். இதுதான் சீவகாருண்யமென்றும், சிவநிலை அடைவதற்கு முதற் படியென்றுஞ் சொல்வர் நம் ஆன்றோர். திருவருட்பா வாசித்த திவ்வியவுள்ளம்பெற்ற ஒவ்வொரனுபூதிமான் களுக்கும் மேற்சொன்னது நன்கு விளங்கும். உபநிட தப் பிரமாணத்தால் சீவகாருண்யத் தன்மைபெற்ற சீவன் பிரம்மாவின் ஆயுளும், பாச வைராக்கியத்தால் விஷ்ணு ஆயுளும், ஈஸ்வர பக்தியால் உருத்திரன் ஆயுளு மடைவதாகத் தெரியவருகின்றது. தேகாபி மானம் நீத்த அருள்வெளி நாட்டத்தால் சீவன் என்றும் இறவாத அருட்சீர இயல்புபெற்று சிவமய மாகலாம். குருராமலிங்கம் ! குணமான தங்கம் !

## எட்டாம் பௌர்ணமி

### 8. மோட்சம் :

மோட்சமென்பதென்னை ? மோட்சமென்பது விருப் பம். முமுட்சு முமுட்சமென்று பொருள்படும். மோட்சமென்னுஞ் சொற்கே மோசமென்று சொல்லலாம். ஏனெனில் உடல் நீங்கின ஆன்மா எங்கேயோ ஒரு தலத் தில் சுகமடைவதென்று சொல்லும் வைணவர் இத் தலத்தை வைகுண்டமென்றுஞ் சைவர் கைலாயமென் றுங் கிறிஸ்தவர் பரலோகமென்றுஞ் சொல்லுவதைக் கேட்டோம். சுருதி யுக்தி அநுபவப் பிரமாணத்தினு லுஞ் சுத்தானுபூதியர்கள் "கண்டவர் விண்டிலர் ; விண் டவர் கண்டிலர்" என்னுஞ் சொல் அனுபவத்தில் ஒரு வாறு உண்மையென்று தோன்றுகிறது. மற்று வேறென் றுங்காணேம். இது எத்தகையதெனில் விட்டில் பூச்சி

விளக்கொளி பழமென்று கண்டு நாடி இறந்த லொக்கும். "சிதம்பரம் போனவர் திரும்பி வருவாரோ" என்று கோபால கிருட்டின பாரதியால் எல்லோருக்கும் நன்கு புலப்பட்டிருக்கும். சுத்த சுவாநுபூதியர்கள் பரம்பொருளொன்று தான் சத்தியப் பொருளென்று கைப்பற்றி அனுபவித்து அசைவற நிற்பதுவே மோட்சமென்று கூறுகின்றார். மற்றவையெல்லாம் மோசமெனப் பொருள்படு மென்றார்கள். இதற்குத் தடையாயுள்ளது காமம், மோகம், சந்தோடம். இதுகளை நீக்கி மனங் கரைந்த நிலையிலே நிற்றல் மோட்சம்.

"தன்னையறிந்தருளே தாரகமாய் நிற்பதுவே
உன்னை யறிவதற்கு பாயம்"

"எங்கெங்கே பார்த்தாலு மெவ்வுயிர்க்கவ்வுயிராய்
அங்கிங்கிருப்பது நீயன்றோ"

"யானெனல் காணேன் பூரணநிறைவாய்
யாதிலுமிருந்த பேரொளிநீ"

## ஒன்பதாம் பௌர்ணமி

### 9. சுத்தசன்மார்க்க நிலை :

ஆனந்தமாகிய அருள்வழி நாட்டத்துடன் அகண்டாகாரத்தி லசைவற நிற்றலே சுத்த சன்மார்க்கத்தின் முடிவாம். சன்மார்க்க மென்பது நல்ல வழி. இது மூன்று வகைப்படும். சமய சன்மார்க்கம் மத சன்மார்க்கம் சுத்த சன்மார்க்கமுமாம். மேற்சொன்ன இரண்டும் நீங்கிய சுத்தசன்மார்க்கத்தை நமது பட்டணத்து சுவாமிகள் :—

நல்லாரிணக்கமும் நின்பூசை நேசமும் ஞானமுமே
யல்லாது வேறுநிலையுளதோ வகமும் பொருளு
மில்லாளுஞ் சுற்றமுமைந்தரும் வாழ்வுமெழி லுடம்பு
மெல்லாம் வெளிமயக்கே யிறைவா கச்சியேகம்பனே.

இங்ஙனம் மேற்சொல்லிய நல்லாரிணக்கமே சுத்த சன்மார்க்கத்துக் கேற்ற நிலை. இத்தகைப் பயிற்சியி லிடைவிடாது நிற்பதுவே சுத்தசன்மார்க்கமான சொரூப நிலை. மானிடப் பசுக்கூட்டத்தில் தான் மானிடனென்ற றிந்து தக்க முயற்சிகளைச்செய்து நல்லார் வழிபடும் மார்க் கத்தில் சதா ஒழுகுவதே மரணமென்கிற கற்பனையான சொற்களைக் கனவிலும் வாரமலொழிக்கும் உள்முகநாட் டத்திலுலாவுஞ் சீவன் அந்தங்களினது அந்தமுந் தனக் குப் பூர்வமாயுள்ள உத்தரமுகமாய் நின்று தரிசித்தல். இதுதான் சமரசம். விந்து பரவிந்து இரண்டையும் நீக்கச் சுத்தவிந்து தோன்றற்போலும் பரசிவமென்பதை மறுக்கச் சுத்தசிவம் விளங்கற்போலும் சனமார்க்கஞ் சிவசன்மார்க்கமென்பதை மறுக்கச் சுத்தசன்மார்க்கமே நமது இராமலிங்க சுவாமிகளாலேற்பட்ட கூடாந்த சமரச சுத்தசன் மார்க்கமாம்.

சன்மார்க்கமென்பது நல்லறிவுடைய மக்களிடம் உறவுகொண்டு சதாசிவ சிந்தனையுற்று வழிபடுமார்க்க மாகிய நல்லிலக்கணம் வாய்ந்த சாத்திரங்களின் வாயி லாகவுள்ள உயரனுபவ நிதிபோகத்தைத் தினந்தோறுஞ் சிந்தனை செய்வதுமல்லாமல் தானடையவேண்டிய ஒன் றுக்கேற்ற வகைகளில் சற்றும் மனச்சலனமில்லாமல மாற்றுயர்ந்த பொனபோல பிரகாசமுற்று உருவாகி உணர்வு நிலையை அடைவதுடன் உணர்வாகாரமாய் விடு வார்கள். உணர்வே அன்பின் மிகுதியால் சிவமெனவறிக;

"பொற்பங்கயத்தின் புதுநறவுஞ் சுத்தசலமும் புகல்கின்ற
வெற்பந்தரமா மதிமதுவும் விளங்கும் பசுவின் றீம்பாலும்
நற்பஞ்சகமு மொன்றாகக் கலந்து மரணநவைதீர்க்குங்
கற்பங்கொடுத்தாய் நின்றனக்குக் கைம்மாறேது கொடுப்
பேனே."

"உலகுயிர்த்திரளெலா மொளி நெறி பெற்றிட
விலகுமைந் தொழிலையும் யான் செயத்தந்தனை."

"தந்தையைக் கண்டேனான் சாகாவரம் பெற்றேன்
சிந்தை களித்தேனென்றூதிப்பற
சித்தெல்லாம் வல்லேனென்றூதிப்பற"

— திருவருட்பா

# 12. தத்துவ விளக்கம்



நிஜாநந்த ரூபம் நிராலம்ப தீபம்
நிராகார தேஜம் நிவாஸ ப்ரகாசம்
ஸஜாதீத யதீதம் ஸபேசம் நடேசம்
பஜே ராமலிங்கம் பஜே ராமலிங்கம்.

ஏகதத்துவந் தொண்ணூற்றாறையுஞ் சுவாநுபூதியர்கள் மூன்றுவகையாகப் பின்வருமாறு பிரித்திருக்[illegible]ர்.

| (1) | | (2) | | (3) | |
|---|---|---|---|---|---|
| தேக தத்துவம் 30 | | [illegible] யா[illegible] தத்துவம் 30 | | சிவ தத்துவம் அல்லது ஞான தத்துவம் 36 | |
| (a) பூதம் | 5 | (a) நாடி | 10 | ஆதாரம் | 6 |
| (b) பொறி | 5 | (b) வாயு | 10 | மண்டலம் | 3 |
| (c) புலன் | 5 | (c) [illegible]யம | 5 | மலம் | 3 |
| (d) கன்மேந்திரியம் | 5 | (d) கோசம் | 5 | தோஷம் | 3 |
| (e) ஞானேந்திரியம் | 5 | ஆக | 30 | ஈஷணை | 3 |
| (f) கரணம் | 4 | | | குணம் | 3 |
| (g) அறிவு | 1 | | | வினை | 2 |
| ஆக | 30 | | | இராகம் | 8 |
| | | | | அவத்தை | 5 |
| | | | | ஆக | 36 |

## பஞ்சபூத தத்துவ நிரூபணம்

| I. (a) ஆகாயம் | சுத்தவெண்மை | சிதம்பரம். |
|---|---|---|
| வாயு | காற்று | சீகாளத்தி. |
| தேயு | அக்கினி | திருவண்ணாமலை. |
| அப்பு | நீர் | திருவானைக்கா. |
| பிருதிவி | மண் | காஞ்சீபுரம். |

## ஐம்பொறி நிரூபணம்

| (b) சுரோத்திரம் | ஆகாயம் | சப்தம். |
|---|---|---|
| துவக்கு | வாயு | ஸ்பரிசம். |
| சட்சு | தேயு | ரூபம். |
| சிங்குவை | அப்பு | சுவை. |
| ஆக்கிராணம் | பிருதிவி | மணம். |

## ஐம்புல நிரூபணம்

| (c) சத்தம் | ஆகாயம் | செவி. |
|---|---|---|
| பரிசம் | வாயு | சருமம். |
| ரூபம் | தேயு | நேத்திரம். |
| ரசம் | அப்பு | நாவு. |
| கந்தம் | பிருதிவி | நாசி. |

## கன்மேந்திரிய நிரூபணம்

| (d) வாக்கு | ஆகாயம் | வாய். |
|---|---|---|
| பாணி | வாயு | கை |
| பாதம் | தேயு | கால். |
| பாயுரு | அப்பு | குதம் அல்லது அபானம். |
| உபத்தம் | பிருதிவி | லிங்கம் அல்லது குறி. |

### ஞானேந்திரியம்

| | | |
|---|---|---|
| (e) வசனம் | ஆகாயம் | வசனித்தல் அல்லது வாய். |
| கமனம் | பிருதிவி | கவனித்தல் அல்லது கால்நடைத் தொழில் உடையது. |
| தானம் | வாயு | கொடுத்தல் அல்லது கை. |
| விசர்க்கம் | அப்பு | நீர்விடுதல். |
| ஆனந்தம் | தேயு | கண்டு மகிழ்தல் அல்லது போகித்தல். |

### கரணம் நான்கின் நிரூபணம்

| | | |
|---|---|---|
| (f) உள்ளம் அல்லது அறிவு. | ஆகாயம் | வெளி அல்லது உச்சி. |
| மனம் | வாயு | கண்டம். |
| புத்தி | தேயு | இருதயம். |
| சித்தம் | அப்பு | நாபி. |
| அகங்காரம் | பிருதிவி | தேகாங்கம். |

### கரணங்களின் செய்கை

| | |
|---|---|
| மனம் | நினைத்தல். |
| புத்தி | விசாரித்தல். |
| சித்தம் | மகிழ்தல். |

அகங்காரம் ஒன்றைக் கொண் டெழுப்புதல். (இதற்கு முதற்காரணமா யுள்ளதைக் கண்டு மகிழ்ந் திருத்தல் அறிவாம்.)

| | | |
|---|---|---|
| அறிவுக்கு | மந்திரி | மனம். |
| ,, | பிரதானி | புத்தி. |
| ,, | தளகர்த்தன் | அகங்காரம். |
| ,, | குடிபடைகள் | சித்தம். |

(சுத்த அறிவு சிவம் ஆகாயம்)

## நாடி பெயர்

II. (ர) இடைகலை : வலதுகாற் பெருவிரலில் நின்று கத்தரிக்கோற் போல மாறலாக இடது நாசியைப் பற்றி நிற்பதாம்.

பிங்கலை : இடதுகாற் பெருவிரலினின்று கத்தரிக்கோற் போல மாறலாக வலது நாசியைப்பற்றி நிற்பதாம்.

சுழிமுனை : மூலாதாரத்தி லிருந்து உச்சித்துவாரம் வரைக்கும் நிற்கு நாடி.

சிங்குவை : மூலாதாரந் தொடங்கி உண்ணாக்கில் நின்று அன்னபானுதிகளை விழுங்கச் செய்வது.

புருடன் : மூலாதாரந் தொடங்கி வலது கண்ணளவாய் நிற்பதாம்.

காந்தாரி : மூலாதாரந் தொடங்கி இடது கண்ணளவாய் நிற்பதாம்.

அத்தி : மூலாதாரந் தொடங்கி வலது காதளவாய் நிற்பதாம்.

அலம்புடை : மூலாதாரந் தொடங்கி இடது காதளவாய் நிற்பதாம்.

**சங்குனி :** மூலாதாரந் தொடங்கி அபானத் தளவாய் நிற்பதாம்.

**குகுதன் :** மூலாதாரந் தொடங்கி அபானத்தில் நிற்பதாம்.

## வாயு பெயர்

(b) **பிராணன் :** லலாட மத்தியிற்றோன்றி சித்திர நாடியில் விழுந்து மூலாதாரத்திற் குதித்து அகார சப்தம் பெற்று சுழிமுனையிற் கலந்தாலத்து மகார சத்தம் பெற்று வழங்கி நாபி ஸ்தானத்தில் மூட்டி இடைகலை பிங்கலையோடு கபாலத்தைச்சுற்றி நாசியில் பன்னிரண்டங்குலம் புறப்பட்டு நாலு அங்குலம் நீங்கி எட்டங்குலம் மீண்டும் விவகாரஞ் செய்வதாம்.

**அபானன் :** கீழ் நோக்கிக் குதத்தையுங் குய்யத்தையும்பற்றி நின்று மலமுதலியவைகளை உதைத்துத் தள்ளுவதாம்.

**வியானன் :** தோலிலே நின்று பரிசங்களை அறிவிப்பதாம்.

**உதானன் :** உதராக்கினியை எழுப்பி அன்ன பானாதி சத்துக்களை 72,000 நாடி நரம்புகளிலே கலப்பித்துச் சரீரத்தை வளர்ப்பிப்பதாம்.

**சமானன் :** எல்லா வாயுவையும் சமமாக ஏறத்தாழ்வில்லாமல் விவகரித்தலாம்.

**நாகன் :** கொட்டாவியின் விக்கல் கக்கல் முதலானதை உண்டாக்குவதாம்.

கூர்மன் : கண்ணிலே நின்று இமைப்பதாம்.

கிரிகரன் : புருவ மத்தியில் நின்று கோபித்தல், தும்முவித்தல் முதலியவைகளைச் செய்தலாம்.

தேவதத்தன் : விழித்து இருக்கும்போது ஒடுபுலாவிச் சிரித்தலும் விசனப்படுதலும் முதலியவைகளைச் செய்வதாம்.

தனஞ்சயன் : பிராணன் உடம்பை வீங்குவித்தலும் விரிவித்தலும் சகலவித நாசகாரியத்தைச் செய்து காலத்தைப் பிளந்து ஓடிப் போவதாம்.

## விஷயம் பெயர்

(c) அமர்வாசயம் : சாப்பிட்ட அன்னபானாதிகளமரு மிடம்.

பகிர்வாசயம் : அன்னந் தண்ணீரையும் பிரிக்குமிடம்.

ஜலவாசயம் : ஜலந் தங்குமிடம்.

மலவாசயம் : மலந் தங்குமிடம்.

சுக்கிலாசயம் : சுக்கிலஞ் சேருமிடம்.

## கோசத்தின் பெயர்

(d) அன்னமயம் : தூல தேகத்தை வளர்த்து ஷட்பாவவிகாரம் ஆறும், அதற்குரிய பிருதிவி பாகமாகிய தோல், நரம்பு, தசை உதிரம், எலும்பு, மச்சை (இது பிருதிவி சம்பந்தமாம்.)

பிராணமயம் : பிராணனும் கன்மேந்திரியமும் கூடி நிற்பதாம். (இது அப்பு சம்பந்தமாம்.)

மனோமயம் : மனதும் கன்மேந்திரியமும் கூடி நிற்பதாம். (இது தேயு சம்பந்தமாம்.)

விஞ்ஞானமயம் : புத்தியும் ஞானேந்திரியமும் கூடி நிற்பதாம். (இது வாயுவின் சம்பந்தமாம்.)

ஆனந்தமயம் : பிராணவாயுவும் சுழுத்தியும் கூடி நிற்பதாம். (இது ஆகாச சம்பந்தமாம்.)

## III ஆதாரத்தின் பெயர்

(பிரணவ சொரூபம் ஓம். கோபுரவாயில்)

(i) மூலாதாரம் : நாற்சதுரத்துக்குள்ளே முக்கோண மாயிருப்பது நான்கிதழ்க் கமல மடங்கி இருப்பது. இதனடுவே நிற்கு மெழுத்து ஓம் ; இதையே ஓங்காரமென் றுஞ் சொல்வர். இதற்கு அதிகாரி தேவதை விநாயகர் ; சத்தி குண்டலி. இதனுண்மை நிலை, குதத்துக்கும் குய்யத்துக்கும் நடு. நிறம் மாணிக்கம் போன்றது —

(துஜஸ்தம்பம்)

சுவாதிட்டானம் : நாற்கோணத்துக் குள்ளாறிதழ்க்கமல மடங்கினது. இதனடுவே நிற்கும் பீஜஎழுத்து நகாரம். இதற்கு அதி

காரி தேவதை பிரம்மா, சரஸ்வதி— நிறம் பொன் போன்றது. இதனிடம் இலிங்க பீடம்.

(பலிபீடம்)

மணிபூரகம் : பிறைக் கோணத்துக்குள் பத்திதழ்க் கமலங்களடங்கினது. இதனடுவே நிற்குமெழுத்து மகாரம். அதிதேவதை விட்டுணு, இலக்குமி. நிறம் மரகதம் ; இதனிடம் உந்திக்கமலம்.

(பெரிய நந்தி)

அனாகதம் : முக்கோணத்துக்குள் பன்னிரண்டிதழ்க் கமலங்களடங்கினது. இதனடுவே நிற்கும் எழுத்து சிகாரம். அதிதேவதை ருத்ரன், ருத்ரி. நிறம் ஸ்படிகம். இதனிடம் ஹிருதயகமலம்.

(அதிகார நந்தி)

விசுத்தி (வாயு) : அறுகோணத்துக்குள் ஈரெட்டிதழ்க் கமலங்க ளடங்கினது. இதனடுவே நிற்கு மெழுத்து வகாரம். அதிதேவதை - மஹேஸ்வரன், மஹேஸ்வரி. நிறம் மேகம்போன்றது. இடம் கண்டம்.

(ஆகாஸம்)

ஆக்ஞை : வட்டத்துக்குள் மூன்றிதழ்க் கமலங்க ளடங்கியது. இதனடுவே நிற்கும் எழுத்து யகாரம். அதிதேவதை சதாசிவன், மனோன்மணி. இடம் புருவம்.

நிறம் : செம்புக் கல் சிந்தை விளங்குஞ் சித்திரதீபம்.

மண்டலத்தின் பெயர்

(b) அக்கினி : நாற்சதுரமாய் நடுவே முக்கோணமாய் பிருதிவி அப்புவுங் கூடினவிடத்தே நாலிதழுடைய புட்பம் போன்றது. (முக்கிய குறிப்பு) பாதமுதல் தொப்புள்மேல் வரைக்கும்.

சூரியன் : இருதய கமலத்தி லறுகோணமாய் எட்டிதழுடைய வாழைப்பூப் போன்று கீழ் நோக்கியிருப்பது. (முக்கிய குறிப்பு) மார்புமுதல் கண்டம் வரைக்கும்.

சந்திரன் : எண்ணிலா சந்திருதித்து தற் பிரகாஸம் போன்று உச்சி நடுவே ஜொலிக்கும் ஓகார அட்சரத்தை முன்னிட்டு பேதித்து, முதற்சொன்ன அக்கினிமண்டலத்தை மேனோக்கிச் சுயப்பிரகாஸ சொரூபமாய் விளங்குவதெதுவோ அதுவே அருட்பெருஞ்சோதி யென்பதாம். இதன் நடுவே தோன்றுவது பரை தரிசனம். (முக்கிய குறிப்பு) இவ் விரண்டையுஞ் சேர்த்து தானதுவாக நிற்றல்.

மலத்தின் பெயர்

(c) ஆணவம் : உடம்பை நானென் றபிமானித்துச்செருக் கடைதல்.

காமியம் : பார்ப்பதையெல்லாம் இச்சித்தல்.

மாயை : தனக்கு வருவதை அறியாமற் கோபித்தல்.

(d) தோடத்தின் பெயர் :—

வாதம் : வாயுவின் அம்ஸம்.
பித்தம் : அக்கினியின் அம்ஸம்.
சிலேத்துமம் : அப்புவின் அம்ஸம்.

(e) ஈடணையின் பெயர் :—

அத்தன் : நிலையிலா செல்வத்தி லிச்சை வைத்தல்.

புத்திரன் : மக்கட்பேற்றி லழுந்தல்.
உலகம் : நிலம் நீரடைய விரும்புதல்.

(f) குணத்தின் பெயர் :—

இராசதம் : அகங்காரமாய் மத்திம குணத்தினனாய் இருத்தல்.

தாமதம் : பித்தனுயும் அதம குணத்தினனுயு மிருத்தல்.

சத்துவம் : உத்தம குணத்தினனுய் யாவர்க்கும் நல்லவனு யிருத்தல்.

(g) இராகத்தின் பெயர் .—

காமம் : இச்சை.
குரோதம் : பிணக்கு.
லோபம் : ஈயாமை.
மோகம் : அபரிமித ஆசை.
மதம் : கெர்வம்.

மாச்சரியம் : உதட்டில் உறவும் உள்ளத்தில் பகையும்.

இடும்பை : உதாசினம்

அசூயை : பொறாமை.

(h) வினையின் பேயர் :—

நல்வினை : புண்ணியம்

தீவினை : பாவம்

அவத்தையின் பேயர்

(i) சாக்கிரம் : (இடம் - லலாடம்) மனம் நிகழ் காலத்தில் நான் சாக்கிரதையோடு விவகாரஞ் செய்கிறேனென்பது.

சோப்பனம் : (இடம் - கண்டம்) நிகழ்காலத்தில் செய்த காரியத்தடிப்பே தனக்குப் பிரதிபலிப்பது. இது சிற்சில காலத்து நிகழ்காலத்தில் விவகாரஞ் செய்யாததுகூட தனக்குத் தானே சொல்லத் தெரியாமல் மனோபாவனையாய் நிற்பது.

சுழுத்தி : (இடம்-இருதயம்) நினைப்பும் மறப்பு மற்ற விடம்வாய்ந்த சீவன் அந்தகாரதிசையில் விவகாரஞ் செய்கிறோமென்கிற எண்ணம் நழுவியிருத்தல்.

துரியம் : (இடம் - நாபி.) 106, 108-ம் பக்கத்திற் காண்க.

துரியாதீதம் : சொல்லெழா ஆனந்தத்திற் கலந்திருத்தல்.

தத்துவ மனைத்துந் தனித்தனி கடந்தே
தத்துவா தீதமே னிலையில்
சித்தியல் முழுதுந் தெரிந்தன மவைமேற்
சிவநிலை தெரிந்திடச் சென்றேம்
ஒத்தவந் நிலைக்கண் யாமுமெம் முணர்வு
மொருங்குறக் கரைந்துபோயினமென்
றத்தகை யுணர்ந்தோர் வழுத்தநின் றோங்கும்
அருட்பெருஞ் ஜோதியென் னரசே.

தத்துவ மெல்லாமென் றன்வச மாக்கிச்
சாகாவ ரத்தையுந் தந்தெனைத் தேற்றி
யொத்துவந் துள்ளே கலந்து கொண் டெல்லா
வுலகமும் போற்ற வுயர்நிலை யேற்றிச்
சித்தியெ லாஞ்செயச் செய்வித்துச் சத்துஞ் சித்தும்
வெளிப்படச் சுத்தநா தாந்த
அத்திரு வீதியி லாடச்செய் தீரே
யருட்பெருஞ் சோதியென் னாண்டவர் நீரே.

கற்றேன் சிற் றம்பலக் கல்வியை
கற்றுக் கருணைநெறி
உற்றேனெக் காலமுஞ் சாகாம
லோங்கு மொளிவடிவம்
பெற்றே னுயர்நிலை பெற்றே
னுலகிற் பிறநிலையைப்
பற்றேன் சிவானந்தப் பற்றேயென்
பற்றெனப் பற்றினனே.

— திருவருட்பா



## 13. வாதவூரடிகள் வாசகமும் வடலூர் வள்ளல் வியப்பும்

(திருச்சிற்றம்பலம்)

அகண்ட சிவவியாபக விளக்கமே அறிவு. தன்னியல்பைத் தலைப்படுத்துங் கல்வியே அறிவு. தன்னியலைக் காணத் தகுதியில்லார் தானெனுந் தன்மையாகிய சச்சிதானந்த ஸ்புரிப்பை அடையார். இத்தகைச் சச்சிதானந்தம் இருளற்றது. தொல்லுலகில் மன்னும் இதிகாஸங்களில் சிவனை யடைவதற்கு உளஞ்செறியும் உண்மை ஒன்றே கடவுள். கடவுளென்பது பற்பலர் பற்பல விதமான கொள்கைகளாற் கற்பனை ரூபமாக அலங்கரித்து மதமான பேய்பிடித்து உண்மை வழியிற் சிக்காதும் மனம் மெய்யைச் சேருந்திறமை வாய்ந்த திவ்விய சுவானுபூதியருடைய அனுபவப் பிழம்பை நன்கறியாதும், அருளையும் தயையும் உண்மை அறிவான வாய்மையையும் இன்னதென்று தெரிந்து கொள்ளச் சக்தி யற்றவர்கட்குக் கடவுளொருவனே யென்ற ஒத்த முடிவு எக்காலத்தில் சங்கற்பமின்றி உதயமாகும்? ஆக்கை இழிவென்றிருந்த ஒவ்வொருவரும் அந்நிலையினின்று அருளைக் கைப்பற்றி மெய்யுணர் வெய்தலே திரு

வாசகத்தின் முடிவு. இவ்வுபந்நியாசத்தைத் தொடங்கு முன்னர் இச்சிறுவன் ஆராய்ச்சி செய்யப்புகுவதாவது பக்தியென்பது என்னை? பக்தியை எத்தகை அடைவது? இத்தகை வாய்ந்தவருடைய தன்மை அனந்தமென்பதும் கூறுவன். பக்தியென்பது அன்பின் விளைவு. பக்தியென் பது உண்மைப்பற்று. பக்தியென்பது கல்லாதவரிடத் தும் கற்றவரிடத்தும் விளங்குமுண்மை. பக்தியென்பது உண்மைப்பொருளை நினைந்து சதா கசிவது. பக்தியென் பது தெய்வ வழிபாடுள்ளவர்களைத் தெய்வமாகப் பாவிப் பதும், இரப்போர்க்கு ஈகையுடனுபசரித்தலும், தம்மை அண்டினவர்களுக்கு இரக்கமுற்று இரட்சித்தலும் எல் லாஞ் சிவமயமே யென்றெண்ணித் தனக்குச் சேமித்து வைத்த தனக்குவியலைத் தக்கோர்பால் அன்பார்ந்து மனமுவந்து எல்லாஞ் சிவன் தந்ததென்றீதலுமாய அருள் முதிர்ச்சியாம். பக்தியென்பது ஒற்றுமை, பசை யென்றுங் கொள்ளலாம். பக்தியென்பது பரம் அபரம் என இருவகையாம். இதைப் பின்னர் விளக்குவாம். பக்தி அடையும் விதம் ஒருவனுக்குண்டாவதெப்படி என்றுயுங்கால் உலகம் துக்கவடிவாகத் தோற்றல் வேண்டும். துக்கம் வந்த காலத்து நன்மைவருமென்று துணிபுகொண்டவரே பக்திமான்கள். எல்லாம் உன் அடிமை, எல்லாமுன்னுடைய செயலென்றெண்ணிச் சதா காலமிருப்போர்க்குத் தெய்வீகம் தனக்குந் தெரியாமல் விளங்கும். பக்தியிலீடுபட்ட மனமானது உருவகப் படுத்தியுள்ள உத்தமமூர்த்தியாகிய உபாசனாமூர்த்தி யின்மீது பரவசமாகி மேன்மேலும் ஆவல் பிறந்து தமது கண்ணினின்று நீர்பெருகி மயிர்க்கூச்செறிந்து தன்னைத் தானின்னதெனத் தெரியாமல் தனக்குள் ஒளிரும் மின்னல்போன்ற பிரகாசம் கணத்துக்குள் கணம்

மறைந்ததும் மறையாததுமாகக் காணப்படுகின்ற கறை யில்லாக் காட்சியே பக்தியின் முடிவு. இத்தகைய ஓய் வுடைய மனதானது சிற்சில காலத்திலோர்விதமான ஆனந்தம் பெருகித்தாக்கற்று மவுனங் குடிகொண்டு தானனுபவிக்கு மெண்ணமொன்று நீங்க மற்றைய நினைப்பு இறக்குங்காலை காணப்படும் பொருள்களெல் லாங் கொஞ்சங்கூட மனத்திற்பற்று. இத்தகையுடையார் அகண்டாகாரமான சிவவெளி எய்துவர். கசத்ததேகத் திலிருக்குங் கடவுள் ஆனந்த சபேசனென்று நன்கு தெரிந்தவர் தேவாலய கோபுரத்தின் சிகரத்தைக் கண்ட இவர் உள்ளம் வானளாவி அந்தக் கோபுரத்தைக் கடவு ளாகப் பாவித்து ஆரவாரித்தல் பக்தியினியல்பாம். அவ ரிருக்கும் நிலைக்கேற்ப சங்கற்பநிலை சடுதியில் மாறும். துக்கம்வந்த காலத்து கடவுளைத் தியானிப்பவரனே கம். ஆனால் துக்கமே மனத்தைச் சுத்தமாக்குமோர் தைலம். இதைத்தான் நமது ஒற்றியூர் பட்டினத்தடி கள் சகலரும் பரம்பொருளில் ஒற்றுமைப்படும்படி செத் தாரைப்போலே திரிபவர்க்கே இறப்பு பிறப்பென்கிற அபவாதமொழியும்; ஈது பக்தியின் விளைவென்றே பக்த விஜயத்திற் பக்தர்களும், சேக்கிழார் பெரிய புராணத் தில் நாயன்மார்களும், வைணவப் பிரபந்தங்களில் ஆழ்வா ராதிகளும் துக்கத்திலாழ்ந்து இறுதியில் சுகத்தன்மை வாய்ந்தவர்க ளாதலைக் கொண்டு அறியலாம். மற்று வேறென்னை? உண்மையான பக்தியில் விளைவன யாதெ னில் ஆரூடஞ் செப்புதல், மருந்தின்றி நோய்த்தீரல், மெய்ம்மறந்து கூறுதலே எதிர்காலத்து விளைவதும் இன்னம் அனேகவிதமான சித்திகள் விளையும் பெருமை, டம்பம் என்பதொழிந்தவரிடத்து விளங்கும் பேராப ரணமே பக்தியாம். கோத்த நிலைகுலையாத பரவசமாகிய

சச்சிதானந்த ஸ்புரிப்பே சச்சிதானந்த நிலையை அறிவ தற்குமுன் அறியவேண்டிய முக்கிய ஆராய்ச்சி எத் தகைய வெனில் :—

நாம் யார்? நாமுலகத்திற் செய்யவேண்டிய கரு மம் யாது? இத்தகைய கிரியையினால் விளையும் பலன் ஈதென்றறிந்த நமது மணிவாசக சுவாமிகளே நம்நாட் டிற்கு ஒரு திலகம்போல் விளங்குகின்றனர். ஆனால் ஈதெல்லாம் ஸ்தூல பார்வையிற் சிக்கா. சூட்சுமபுத் தியையுடைய அநுபூதிமான்கள் பக்திமான்கள் ஒவ் வொருவரும் நித்தியானந்த வாழ்வை எய்தியிருக்கின் றனர். இவரருளிச்செய்த தமிழ்வேதமாகிய "திருவாச கத்திலுருகான் மற்றொரு வாசகத்துக்குருகான்" என்ற ஆன்றோர் வாக்காற் காண்க. — இத்தகைய பெருமையை வாய்ந்தவர் சரிதையை முற்றிலுஞ் சொல்லப் புகு வதற்குப் போதுமான காலமின்மையால் ஒருவாறு சிற் றறிவிற் கெட்டின வண்ணங் கூறப்புகுவேன். — ஸ்ரீமத் மாணிக்க வாசகர் வாதவூரென்னுங் கிராமத்தில் பிரா மணத் திருமேனியாக அவதரித்தார். இவர் தந்தை யார் சம்புபாதாசிருதர்; தாயார் சிவ ஞானவதியார். இவர் சற்றேறக்குறைய 300-ம் B. C. இருந்ததாகத் தெரிய வருகிறது. இவர் சிவபுண்ணியப் பேற்றால் சகல சாஸ் திரக் கல்வி கேள்விகளால் மிக்க ஆராய்ச்சி உடையவ ரென்றுணர்ந்த அரிமர்த்தன பாண்டியன் அவரை வர வழைத்து அரசாங்க முதல் அமைச்சனாக ஏற்படுத் தினன். தென்னவன், பிரமராயன் என்னும் பெயருடன் மந்திரி உத்தியோகத்தை நடாத்தினர். அக்காலத்து அவர் வயது 18. சுவாமிகள் தன் வாழ்நாளில் மிகவும் வெறுப்புற்றவராய் இத்தகைய கௌரவமான தொழிலைத்

தான் மனப்பூர்வமாக அங்கீகரிக்காமல் அரசன் எண்ணியபடி ஒருவாறு அங்கீகரித்தனர். ஆனாலும் இவர் மனப்பற்று எத்தொழிலைச் செய்தபோதிலும் தன் மனநாட்டம் சிவம் ஒன்றிலேயே மிகவூடுருவியது. இவ்வாறு சிலகாலம் அரசாங்க சேவகஞ்செய்யுங்காலை பாண்டியன் அமைச்சனை வரவழைத்து நமது அரசாங்கக் கொட்டகைக்குத் தற்காலம் போதுமான பரிகளில்லாததனால் நீர் நமது பொக்கிஷத்திலிருந்து வேண்டிய திரவியத்தை எடுத்துக் கொண்டுபோய்த் தக்க குதிரைகளைக் கொண்டு வரவேண்டுமென்று ஆக்ஞை அளிக்க சுவாமிகள் அரசனது கட்டளையைச் சிரமேற்கொண்டவராய் மிகவும் வினயத்துடன் விடைபெற்றுக் கொண்டு திருப்பெருந்துறைக்குச் சென்றனர். இங்ஙனம் நமது சுவாமிகள் குருந்த மரத்தடியில் சிவமேனி உருவத்தோடும் சிவக்குழாத்துடனும் சின்முத்திரை வாய்ந்த ஒரு பிராமணத் திருமேனியைக் கண்டனர். கண்ட அக்கணத்தில் தனக்குப் பேரானந்த ஆவல் பொங்கி அவர் திருப்பாதங்களில் வீழ்ந்தார். இவர்தக்க சீடனென்றறிந்த திருப்பெருந்துறை சிவம் பிரணவ மந்திரத்தை உபதேசித்து மறைந்தனர். நமது பெருமான் அடிமைகட்காக திருக்கோலங்கொண்ட பெருமையை எவ்விதத்தாலெடுத் துரைப்பது. அக்காலந் தொடங்கி நமது சுவாமிகள் தாம் நினைந்த கருத்தாக திருப்பெருந்துறைக்கு வந்ததை மறந்து சுவாநுபூதியிலாழ்ந்த அன்புடையவராகி அரசன் கட்டளைமீறி நடப்பதனால் ஈற்றில் விளையும் கெடுதிகளை ஓராமல் உண்மையாம் சிவததிற்கு வேண்டிய திருப்பணிகள் முற்றும் தான்கொண்டுவந்த திரவியத்தால் ஒருகோயில் கட்டினர். இத்தகைய பக்தி பூண்டொழுகும் நமது சுவாமிகளின் கருத்தை அர

சன் நன்கறிந்து இராஜ சமூகத்துக்கு அவரை உடனே வரவழைத்தனன். கல்வி அறிவுடைய நமது சுவாமி கள் அரசன் கட்டளைக்குத் தவறின்றி மதுராபுரிக் கேகினார். ஆனால் இவர்சரிதை நம் இராமதாஸ் சுவாமி களுக்கொப்பாகும். திருப்பணிச் செய்வதில் இராஜாங்க பொக்கிஷ நிதியைக் கவனியாமல் அன்பு மீக்கால் உண்டாகிய அருட்பெருஞ் சோதி சிவத்திற்கே செலவு செய்யும் நிபுணர்களே. இதுநிற்க சுவாமிகள் அரசன் கட்டளைக்கு உத்தரஞ் சொன்னதாவது "நாளை ஆவணி மாதத்திற்குள் குதிரைகளை இராஜாங்க சமூகத்திற்கு ஓட்டிவரும்படி ஏற்பாடுசெய்து வந்தனன்." இந்தச் சேதியை அறிந்த உற்றுருறவினரெல்லாம் வாத வூரடி களுக்கு என்னவிபத்து நேரிடுமோ என்றேக்கமுற்றவரா யிருந்தனர். கலக்கமெலா மொழியத் திருப்பெருந்துறை யுறை கடவுள் குதிரை மந்தைகளை ஓட்டிக் கொண்டு வரும் சாரதியாகத் திருக்கோலங்கொண்டு மதுராபுரி இராஜமாளிகைக் கேகினார். இதை அறிந்த அரசன் மிக மனஉல்லாசத்தோடு, கொடுத்த தொகைக்குமேல் அழ கான குதிரைகளைக் கொண்டுவந்த அமைச்சனுடைய திறமைக்கு நாமென்ன கைம்மாறு செய்யப்போகிறோ மென்று நினைத்தான். இதுகண்ட திருப்பெருந்துறை சிவம் அரசனை நோக்க அரசன் சாரதியை நோக்க அரசன சாரதியின்மீது விருப்பமுற்றவனாய் பொற்சரிகையினால் நெய்யப்பட்ட ஒரு போர்வையைத் தனது கரத்தினால் கொடுக்க இதைப் பெருமான் தனது சவுக்கினுனியில் வாங்கினர். இதைக்கண்ட அரசன் மனம் தாளாதவனாய் மயங்கிநிற்கக் கண்ட ஸ்ரீமத் மாணிக்கவாசக சுவாமிகள் ஒருவாறு அரசனுக்கு இது அவர்களுடைய தேச ஒழுக்கமென்று மன்னன் மனத்தை மாற்றினர். சுத்த

மனம் வாய்ந்த நம் சுவாமிகள் பாங்கைக்கண்ட பாண்டியன் வேண்டிய திரவியத்தைப் பரிசளித்தனர். பின்னர் அற்றைய நள்ளிரவில் கொட்டகையிலிருந்து பரிகளெல்லாம் நரிகளாயோடி ஊரை நாசம் செய்வதைக் கேள்விப்பட்ட பாண்டியன் கோபாவேசத்தோடு நமது சுவாமிகளை வேதனை செய்ய முயன்றனன். மன்னன் இவரைக் கடுங்கொலைசெய்யப் பிரயத்தனப்படுங் காலையில் வைகை நதிப் பெருக்கெடுத்து ஊரழிக்கத் தெய்வீகம் விளங்கியது. இதைக் கண்ட அரசன் மிகவும் மனம் தடுமாறி 'ஊரைச்சுற்றிலும் கரைகட்ட ஊரிலுள்ள பிரஜைகளுக்கு ஆக்ஞாபித்தார்.

கரைகள் எங்கே பார்த்தாலும் உடைந்ததாலே ஊரைச் சுற்றி நீர்புரண்டது. அரசன் ஊரிலுள்ள ஒவ்வொருவரும் கரையடைக்கத் தம் ஆட்களை அனுப்ப வேண்டுமென்று பறைசாற்றுவித்தான். ஆனால் அவ்வூரில் எளிய வணிகக் கிழவி ஒருத்தி பிட்டு விற்று ஜீவனஞ் செய்துவந்தாள். இவளுக்கு அரசன் மேற்சொன்ன தொழிலைச்செய்ய ஆக்ஞாபிக்க இவள் சக்தியற்றவளாய் நாளை செய்யலாமென்று நாட்களைக் கழித்து வருங்காலை ஒருநாள் மதுரையில் திருக்கோயிற் கொண்டெழுந்தருளியிராநின்ற சோமசுந்தரப் பெருமான் அவ்வீதிவழியே ஓர் கூலி ஆளைப்போலக் கூக்குர லிட்டதைக் கேட்ட இவள் அந்தக் கூலியாளைக் கூப்பிட்டு "நீர் இந்தக் கரையை அடைத்து விடும். இதற்குப் பதிலாக நான் கொஞ்சம் பிட்டு கொடுக்கிறேனென்று சொன்னாள்." அதற்குப் பெருமானும் இணங்கினார். பின்வருஞ் செய்யுட்களால் நம் இராமலிங்க சுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய கருத்தினைக் கவனித்தால் இவர்

மணிவாசக சுவாமிகள் விஷயத்தில் எவ்வளவு ஆழ்ந்த அன்புடையரென்று சொல்லாமலே விளங்கும்.

வன்பட்ட கூடலில் வான்பட்டவையை வரம்பிட்டநின்
பொன்பட்ட மேனியிற் புண்பட்ட போதிற்புவிநடையாந்
துன்பட்ட வீரரந்தோ வாத ஆரர்தந் தூயநெஞ்ச
மென்பட்டதோ வின்று கேட்டவென் னெஞ்சமிடிபட்டதே.

— திருவருட்பா

பிட்டுக்கும் வந்துமுன் மண்சுமந் தாயென்பர் பித்தனென்ற
திட்டுக்குஞ் சீருள் செய்தளித் தாயென்பர் தீவிறகுக்
கட்டுக்கும் பொன்முடி காட்டி நின்றாயென்பர் கண்டிடவென்
மட்டுக்கும் வஞ்சகத் தெய்வமென் கோமுக்கண் மாணிக்கமே.

நான்செய்த புண்ணிய மியாதோ சிவாய நமவெனவே [பவரார்
ஆன்செய்த நாவைக்கொண் டோதப்பெற் றேனெனை யொப்
வான்செய்த நான்முகத் தோனுந் திருநெடுமாலு மற்றைத்
தேன்செய்த கற்பகத் தேவனுந் தேவருஞ் செய்யரிதே.

— திருவருட்பா

நானேயோதவஞ் செய்தேன் சிவாய நமவெனப் பெற்றேன்
றேனாயின் னமுதமுமாய்த் தித்திக்குஞ் சிவபெருமான்
றானேவந் தெனதுள்ளம் புகுந்தடியேற் கருள்செய்தா
னூ னாரு முயிர்வாழ்க்கை யொறுத்தன்றே வெறுத்திடவே.

— திருவாசகம்

திருவாதவூ ரெம்பெருமான் பொருட்டன்று தென்னன்முன்
வெருவாத வைதிகப் பாய்பரி மேற்கொண்டு மேவிநின்ற [னே
வொருவாதகோலத் தொருவாவக் கோலத்தை யுள்குளிர்ந்தே
கருவாத நீங்கிடக் காட்டுகண் டாயென் கனவினிலே.

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
ஊன்கலந்து வுயிர்கலந்து வுவட்டாம லினிப்பதுவே.

வருமொழிசெய் மாணிக்க வாசகநின் வாசகத்தில் [றுத்
ஒருமொழியே யென்னையு மென்னுடையனையு மொன்றுவித்
தருமொழியா மென்னிலினிச் சாதகமேன் சஞ்சலமேன்
குருமொழியை விரும்பியயல் கூடுவதேன் கூறுதியே.

வாட்டமிலா மாணிக்க வாசகநின் வாசகத்தைக்
கேட்டபொழு தங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளு மெய்ஞ்ஞான
நாட்டமுறு மென்னிலிங்கு நானடைதல் வியப்பன்றே.

— திருவருட்பா

இந்தக் காரியம் உடனே செய்யாததனால் வெள்ளம் ஊருக்குள் வருமென்றறிந்து அரசன் அவ்விடத்திற்சேகி அங்கிருந்த கூலியாள் கோலங்கொண்ட சோமசுந்தரப் பெருமானைத் தனது கையிற் கொண்டுவந்த பிரம்பினால் ஓரடி யடிக்கவே பெருமான் மறைவுற்றதும் ஓர் அசரீரி உண்டாயிற்று. "நான் மாணிக்கவாசக சுவாமிகளின் பெருமையை விளக்குவதற்காக நரியைப் பரியாக்கினேன். ஊரில் வெள்ளம் பெருக்கெடுத்தது. நானே கூலியாளாகக் கிழவி தன் பிட்டுக்கு மண் சுமந்து கரையை அடைத்தேன்" என்றதைக் கேட்ட அரசன் நடுக்குற்றுத் தன் புத்தியீனத்தைப் பற்றி விசனமுற்று நகரேகி மாணிக்க வாசகரைத் தான் செய்த குற்றத்தை மன்னிக்க வேண்டு மென்று கேட்கவே அவர் இன்றைய தினம் முதற் கொண்டு தங்கள் இராஜாங்கத் தொழிலினின்று என்னை விடுவியுங்கள். நான் தலயாத்திரை செய்யவேண்டு மென்றுஞ் செப்பினார். இதுசேதி இப்படி நிற்க, தான் எண்ணின எண்ணம் கைகூடுங்காலம் வாய்த்ததென்று மனத்திரத்துடன் திருவாரூர், திருக்கழுக்குன்றம், திரு வண்ணாமலை சென்று பிறகு பொன்னம்பலத்திற் சதா

நிர்த்தமிடும் நம் தனி நடராஜப் பெருமானைக் கண்ட வுடன் இவர் மனம் ஆனந்தம் பொங்கித் தன்னைத் தானின்னுனென்றறியாப் பரவசத்தில் ஓர் அருட்பிர காசஒளி தன்னுள் விளங்கக்கண்டனர். இவர் ஆழ்ந்த பக்தியுடையாராகையால் தேகம் நடுக்குற்று ரோமஞ் சிலிர்த்து ஆனந்த பாஷ்பம் கண்ணினின்று தாரைதாரை யாய்ப் புரண்டு 'சிவசிவா போற்றி,' என்னுஞ் சொற்கள் வாய்விட்டு நழுவினது. அங்கிருந்த பிரஜைகள் பரித பிக்கும்படியான நிலையை வகித்தனர். சற்றுநேரமான வுடனே கோயிற்றிருப்பதிகத்தைப் பாடினர். இப்பதி கம் வாசித்த ஒவ்வொருவரும் இதன் உள்கருத்தைக் கவனித்தால் நமது ஸ்ரீ நடராஜப்பெருமான் மகிமையும், பெருமையும் இன்னும் பற்பலவிதமான சுத்த அனுபவ நிலைகட்குரிய விளக்க உண்மைகளும், சபேச நடனத்தி யல்பும் புலப்படுதற்கு யாதுஞ் சந்தேகமில்லை. துகள் நீக்கிய மன ஆற்றலையுடைய துரியநிலை பொருந்திய நம் மாணிக்க வாசக சுவாமிகள் ஒரு புறத்தேசென்று தனியாக நிஷ்டை செய்ய உட்கார்ந்தார். மெய்யுண்மை சோரும் பௌத்த சமயத்தார் சைவசமயம் உரம்பெற் றதைக் கண்டுங் கேட்டும் மனந்தாளாதவராய் சிதம்பரத் துக்கேகி ஒரு பெரிய கூட்டத்தைக் கூட்டினர். கோயில் தீட்சதர்கள் இவர்களைக் கண்டுங்கவனியாமல் அசட்டை செய்தவராயிருந்தனர்.

இன்னுஞ் சில தீட்சதர்கள் பௌத்த சமயக் கூச் சலைக்கேட்டு நம் சுவாமிகளிடஞ் சென்று "சுவாமிகாள், நீர் இவர்கள் வீண் விவாதஞ் செய்வதைத் தடுப்பீராக" என்று வினயத்துடன் வருந்திக் கேட்டனர். ஆனால் சுவாமிகள் அவர்கள் முகம் தெரியாதபடி ஒருதிரை கட்

டிப் பிறகு புத்தர் கேட்ட கேள்விகட்குத் தக்க சிவ மணங் கமழுங் கல்வி யறிவு பக்தி நிறைந்துள்ள விடைகள் தர, தங்கள் தங்கள் மனத்திற்கு ஓர் ஆவேசத்தை உண்டுபண்ணி சிவப்புண்ணியப்பேற்றில் நாமெல்லாம் ஒருங்கே சேர்ந்தாற் சுகப்படலாமென்ற எண்ணம் ஒவ்வொருவர் இருதயத்திலும் விளங்கினது.

"புத்தர் முதலாய புல்லறிவிற்பல் சமயந்
தத்த மதங்களிற்றட்டுளுப்புப் பட்டு நிற்கச்
சித்தஞ்சிவமா க்கிச்செய்தனவே தவமாக்கு
மத்தன் கருணையினாற் றேணேக்க மாடாமோ."

— திருவாசகம்

அவ்வமயத்து வந்திருந்த சோழ இராஜனுடைய புதல்வி ஊமைப் பெண்ணாகையால் அவளைப் பேசும் படி செய்வித்ததுமன்றிப் பௌத்தர் கேட்டகேள்விகளுக்கெல்லாஞ் செவ்வனே விளக்கவந்த திறமை சுவாமிகளின் தெய்வீகத்தன்மை யன்றோ! திருவாசகத்தை நன்கறிந்த நல்லியல்பை வாய்ந்த ஒவ்வொருவருந் திருச்சாழலின்கண் நன்கறியலாம். கடைசியில் பௌத்தர்கள் இராஜஸகுணம் வாய்ந்தவராகையால் அவர்கள் போர்த்துக் கொண்டுவந்த சிவப்பு அங்கியைநீக்கிச் சாத்மீககுணமான வெண்ணிறம் பொருந்திய வேட்டிகளைத் தரித்து மாணிக்கவாசகர் திருக்கரங்களாற் கொடுக்கப்பட்ட திருநீற்றால் விளங்கினர். ஈதெல்லாம் அறிந்த ஈசன் நம் சுவாமிகளிடம் நோக்கிச் சென்று, சுவாமி! நான் உங்கள் பெருமையைக் கேள்விப்பட்டு நெடுந்தூரமிருந்து வந்தவாறு யாதெனில் தாங்கள் சிதம்பரத்தில் வீற்றிருக்கும்படியான தனி நடராஜ வள்ளற் பெருமான் மாட்சியைப்பற்றி ஒரு கோவை தாங்

கள் பாட அடியேன் எழுத விருப்புற்றேன் என அதற்கு, நம் வாதவூரருளாளர் இணங்கிப் பாடத் தொடங்கவே தனிப்பெருங் கருணை வள்ளற்றிருக்கரங்களா லெழுதி முடித்தனர். வந்த விருத்தாப்பியர் உடனே மறையவே வாதவூரர் நடராஜப் பெருமானல்லாது மற்றுறில்லை யென்று தனக்குள் பேரின்பந் தலைமீக்கேறி கண்ணி னின்று நீர்புரள மெய்ம்மறந்து சிவயோகத்திலாழ்ந்தவ ரானார். இக்கோலம் இத்தகை யிருக்க ஆனந்த சபேசன் திருவடிகளில் திருவாசகமும் திருச்சிற்றம்பலக் கோவை யாரிரண்டு மிருக்கக் கண்ட தில்லைமூவாயிரவர் மறு நாட்காலை உலகத்துக் கிரண்டு கண்ணுண்டானதுபோல் இப்பெரிய சிறந்த காவியங்களைக் கண்டு அதனில் நிகழும் அழகிய திருச்சிற்றம்பல முடையார் கையெ ழுத்து ஒன்றிருக்கக் கண்டு வியப்புற்று மற்றுஞ் சிற் சில அந்தணர்கள் நம்பெருமான் மாணிக்க வாசக சுவாமிகளை ஆட்கொள்ளும் பொருட்டே திருவவதாரங் கொண்டு மாணிக்கர் திருவாய்மலர்ந்தருளிய சொற்சு வையி லீடுபட்டவராய் அவ் வாசகத்தினுண்ணிய புண் ணியத்தை விளக்கவந்தவரே என்பவரும், மற்றுஞ் சிலர் இப்புண்ணிய சீலரிடம்போய் இவ்விருத்தாந்தங் களைச் செப்பி இவரை ஆரவாரத்தோடு தில்லைக்குவர வழைத்தனர். நம் திருவாசக சுவாமிகள் பொன்னம் பலத்திலுள்ள நடராஜப் பெருமானை நெருங்கியபோது நாதவொலி காதில்பட அவருடம்பு சிலிர்த்தது. அச் சமயத்தில் திடீரென்று நிலவிலுமினியதாய் வெயிலிலுங் காந்தியாய் தென்றலே ஒருருவாய் வந்தாற்போல இன்பா காரமாய் அசைந்தாடுமோர் திவ்யஜோதியானது காட்டி யொளிக்கும் மின்னல்போல ஒரு கண நேரத்துக்குள் நம்மணிவாசகப் பெருமானும் ஜோதியில் மறைந்தனர்.

இதுவுமன்றியும் நம் சேக்கிழார் நாயனார் திருவாக்காலுந் தெற்றெனப் பின் வருஞ் செய்யுட்களாற் புலப்படும் :—

செய்ய திருவாதவூர் வந்தருளி
யமைச்சரெனச் சிறந்து நீடு
வையமிசை வழுதிச்சி கொண்டானைக்
குருந்தடியில் வணங்கி ஞால
முய்யவருட் பணியாற்றி நரிபரியாச்
செய்து நதியுடைப்பி லெங்க
ளையன்முடி மிசையுவந்து மண்சுமக்க
வன்பினுரு வாயி னாரே.

எங்குமா கியவழகன் மேனிபிரம்
படிதாங்க வேங்கிப் புத்தர்
மங்கவா ருள்செய்து மூகைபே
சிடவழங்கி மணிமன்றூடு
மெங்கணா யகன்கரத்தா லேடுமெழுத்
தாணியுங்கொண் டெழுதப்பாடி
யங்கண்மேவிய சோதி தன்னிலிரண்டறக்
கூடி யமர்ந்திட்டாரே.

— சேக்கிழார் நாயனார்

இத்தகைய வியப்பை எவ்வாற்றானுமறிய முடியா. இதைத் தற்கால ஆங்கிலதத்துவ ஆராய்ச்சி நிபுணர்களாலு மறிய முடியா. இதனைப் பின் வருவனவற்றாற் காண்க :—

வெளியா யருளில் விரவுமன்பர் தேக
மொளியாய்ப் பிறங்கியது முண்டோ பராபரமே.

சித்த திருவிகற்பஞ் சேர்ந்தா ருடற்றீபம்
வைத்த கர்ப்பூரம்போல் வயங்கும் பராபரமே.

உன்னுமனங் கர்ப்பூர வுண்டைபோலே கரைய
மின்னு மானந்த விளக்கே பராபரமே.

உன்னு வெளியா யுறங்காத பேருணர்வா
யென்னுவிக்குள்ளே யிருந்தாய் பராபரமே.

சூரியர்கள் சந்திரர் கடோன்றுச் சுயஞ்சோதிப்
பூரண தேயத்திற் பொருந்து நாளெந்நாளோ.

தீதணையாக் கர்ப்பூர தீபமென நானகண்ட
சோதியுட னொன்றித் துரிசறுவ தெந்நாளோ.

வாதவூராளி தனைவான் கருணையால் விழுங்கும்
போதவூரேறே நின்பொன்னடியுங் காண்பேனோ.

— தாயுமான சுவாமிகள்

"நூலுணர் வுணரா நுண்ணியன் காண்க"
"சொற்பதங்கடந்த தொல்லோன் காண்க"
"சித்தமுஞ் செல்லாச் சேட்சியன் காண்க."

— திருவாசகம்

"அற்றது பற்றெனிலுற்றது வீடு". அவா என்பதை நீக்கி நிற்போர்க்குக் கடவுள் மூவகையாக மோட்சத்தைத் தருகின்றனரென்பது நம் சைவத்துணிபு. முதலாவது சாத்திரத்தை வாசிக்கும்போது தான் அடைந்த அதிசூக்குமமான பெருமானிடத்துண்டான முழுவிசுவாசமுடையாரே விஞ்ஞானகலர்; இரண்டாவது கடவுள் கனவினிலும் நினைவினிலும் தோற்றமாகி அதில் மனமானது உருகி ஆராவன்புடையவரே பிரளயாகலர்; மூன்றுவது சகலராகிய சாந்தமே ஒருருவாகி சதா ஆனந்த நித்திரையிலே மனங்கரைந்தவராயுள்ள மாணிக்கவாசக சுவாமிகட்குச் சிவபெருமான் மானிடக் கோலமாய்த் திருபெருந்துறையில் காட்சியளித்தனர்.

## திருவாசக மாட்சி

புண்ணியத்தை வெளியிட்டுப் புன்மை சரீரத்தைப் புனிதமாக்கும் பூர்வநூல். இலகாலத்துக்கு முன்னர் சைவத் திருமுறையைப் பன்னிரண்டாக வகுத்துத் திருவாசகத்தை எட்டாவது திருமுறையென்று நிரூபிக்கப்படுகிறது. ஞானசம்பந்தர் மூன்று திருமுறையாகவும், அப்பர் மூன்று திருமுறையாகவும், சுந்தரர் தேவாரம் ஏழாவதாகவும், திருவாசகம் எட்டாவதும், திருவிசைப்பா ஒன்பதாகவும், திருமூலர் திருமந்திரம் பத்தாவதும், திருமுருகாற்றுப்படை பதினோராவதும், சேக்கிழார் பெரிய புராணம் பன்னிரண்டாவதுமாம். ஆனால் இங்ஙனம் திருவாசகம் ஏன் எட்டாவது திருமுறையாகக் கொள்ளப்பட்டதென்று வாதமிடுவதற்கு வந்ததில்லை. ஏதோ ஒரு காரணத்தைப்பற்றியே நம் செந்தமிழ்நாட்டுச் சங்கப்புலவரொருவராகத் திருமுறைகளைத் தங்களறிவுக் கெட்டியவண்ணங் கல்வியின் நிகுதியாலோ அல்லது கற்றறிந்த பயனாலோ அனுபவமுறைப் பாட்டாலோ இன்னும் ஏது வகையாலோ நன்குதெரியவில்லை. ஆனாலும் ஒன்றுமட்டும் இச்சிறுவனுக்குப் புலப்பட்டதென்னவெனில் சமயக்குரவர்கள் நால்வர்கள் செய்யுள்களில் திருஞான சம்பந்த சுவாமிகள் திருவருட்பாவை முறையாய் வாசித்த ஒவ்வொருவரும் இன்னிசைக்கு ஒத்ததென்றும் அத்தகைய சொற்கள் நிறைந்த மிமிசை விளக்கங்கள் அநுபவவாயிலாகவும் தத்துவ முறைப்படிக் கொத்ததென்றும் பக்தியை அடைவதற்கு சம்பந்த சுவாமிகள் பாசுரங்களே மனத்தை எளிதாக்கும் கருவியென்றுங் கூறுவர். அப்பர்சுவாமிகள் தேவாரம் திருவாசகத்துக் கொத்தேயிருக்கின்றது. எப்

படியெனில் ஒவ்வொரு பாக்களினுட் கருத்தை ஆராய்ச்சி செய்யப்புகுவோமாயின் பக்தி மனோபாவத்தில் நம் மணி வாசக சுவாமிகள் கோட்பாட்டுக்குள்ளடங்கும்.

"உற்றாரை யான் வேண்டேன்
குற்றாலத் தமர்ந் துறையுங் கூத்தா"

— மாணிக்கவாசகர்

"உற்றாருள ரோவுயிர் கொண்டு போம்பொழுது"

— அப்பர்

"சிந்தையே கோயிற் கொண்ட எம்பெருமான்"

— மாணிக்கவாசகர்

"நினைப்பவர் மனங்கோயிலாக் கொண்டவன்"

— அப்பர்

"அவனருளாலே அவன்றாள் வணங்கி"

— மாணிக்கவாசகர்

"அவனருளே கண்ணாகக்காணி னல்லா
லிப்படி யனித்திறத்தன்"

— அப்பர்

"யாவர் கோனென்னையும் வந்தாண்டு கொண்டான்"

— மாணிக்கவாசகர்

"நாமார்க்குங் குடியல்லோம் நமனை யஞ்சோம்"

— அப்பர்

சுந்தரர் தேவாரத்தில் ஆண்டவனிடத்து நட்பு கொண்ட தன் மிகுதியால் ஆண்டவன் அடியார்கட்கு இணங்கி ஏவல்செய்தலை உணர்த்தப்படுவதாம். சரியை, கிரியை, யோகமென்னும் படிக்கிரமங்கள் மூன்றும் மூவர் தேவாரத்திலும் கண்டுணர்க. மற்றும் நம் மணிவாசக சுவாமிகள் திருவாசகத்திலோ அத்தகையான பாங்குகள்

சிற்சில இடத்தில் தோன்றி மறைந்திருக்கிறது. ஆனால் பெரும்பாலும் ஞான ஐக்கிய பாவனையைத் தானுணர்ந்து இரண்டறக் கலந்த தென்னும் பேரிலக்கணத்தைத் தன்னுடைய சுவாநுபூதி பாசுரங்களாற் றெளிவுற விளங்கும். இரண்டறக்கலந்த தென்னும் பெரும் போக்கை யறிந்த பிரபு மணிவாசகர் ஒளியென்றும் ஜோதியென்றுஞ் சிவமென்றும் ஆங்காங்கு சுவாநுபூதி பேராற்றின் மிகுதியால் அணியணியாக அத்தகை அன்புடையார்க்கே அன்பென்றுஞ் சோதியென்றுஞ் சிவமென்றும் தெற்றென விளங்கும். ஏனையோர்க்கு எங்ஙனம் எளிதில் புலப்படும்? இவ்வாறு நமது சுவாமிகள் மாணிக்கமொழிகளைக் கேட்ட மன்றிலாடும் பெருமான் வியப்புடன் வாதஊரர் சொல்ல அவர் திருக்கரங்களால் வரைந்தனர். இதுவன்றோ நம் திருவாசகத்தின் திருச்சிற்றம்பலக் கோவையினருமை பெருமை! இதுகாறுங் கூறிப்போந்த இச்சிறுவன் சிற்றறிவுக் கெட்டிய வண்ணம் சிற்சில விடயங்களைச் சாங்கோபாங்கமாகக் கூறுவன். உணர்வில்வல்ல உரையாசிரியராகிய நச்சினார்க்கினியர் திருச்சிற்றம்பலக் கோவையைப்பற்றி எழுதின சில அரிய கருத்தால் மணிவாசக சுவாமிகள் பெருமையும் அவர் தெய்வீக அனுபவமும் வியப்பினும் வியப்பென்று விளம்பினர். சங்கப்புலவர்களி லொருவராகிய கல்லாடர் அகவற்பா (57) (68) (78) இதிற்காண்க. (409)-வது பக்கத்தில் 49-வது வரியில் கூலிக்கு மண் சுமந்த பெருமையுஞ் சிவம் பிட்டுக்கு அடிப்பட்ட அமைதியும் காண்க.

இன்னம் பரஞ்சோதி முனிவர் அருளிச் செய்த திருவிளையாடல் புராணம் 16-வது பாசுரத்தில் வாதவூரடிகளுக் குபதேசித்த படலத்தில் விரிவாய் நம் சுவாமி

களின் பெருமை அணியணியாக அலங்கரித் திருக் கின்றனர். அவரது தெய்வீக விளக்கம் 400 விருத் தங்க ளடங்கிய திருச்சிற்றம்பலக் கோவையில் இவர் சபேச மூர்த்தத்தில் ஆழ்ந்த அன்புடையவ ரென்றும் மனம் சதாகாலத்திலுஞ் சிவவெளி வியாபகம் எய்தி னவ ரென்றுஞ் சிவ சிதம்பரமே தன்னுட லென்றும் அதனுள் வியாபித்திருக்கும் ஆன்மா அம்பலத்தில் விளங்கும் அருட்பெருஞ்சோதி யென்றும் அதில் சதா மனங்கசிந்து சமாதி நிலை வகிப்பவர் இரண்டறக் கலந்த லென்னு மிலக்கணத்தைச் சத்தியமாக வெய்துவ ரென் றும் திருவாய்மலர்ந்தருளிய தெய்வீகமுள்ள நம் திரு வாசகத்திற்கு என்ன கைம்மாறளிப்போம். ஆன்ம நிகழ்ச்சியுடைய அறிவாளர் அறிவே சிதம்பர மெனறும் அறிவே சிதாகாயமென்றும் அறிவானுபோகமே தில்லையி லருளிச்செய்த கோயிற் றிருப்பதிகமென்றும் பின்வரும் பாக்களால் நன்கு விளங்கும் :—

இன்றெனக் கருளியிருள் கடிந்துள்ளத்
தெழுகின்ற ஞாயிறேபோன்று
நின்ற நின்றன்மை நினைப்பற நினைந்தேன்
நீயலாற் பிறிது மற்றின்மை
சென்று சென்றணுவாய்த் தேய்ந்து தேய்ந்
தொன்றாந் திருப்பெருந் துறையுறை சிவனே
யொன்று நீயல்லையன்றி யொன்றில்லை
யாருன்னை யறியகிற்பாரே.

சோதியாய்த் தோன்று முருவமேயருவா
மொருவனே சொல்லுதற்கரிய
வாதியே நடுவே யந்தமே பந்த
மறுக்கு மானந்தமா கடலே

தீதிலா நன்மை திருவருட் குன்றே
திருப்பெருந் துறையுறை சிவனே
யாதுநீ போவதோர் வகையெனக் கருளாய்
வந்து நின்னிணையடி தந்தே.

தந்ததுன் றன்னைக் கொண்ட தென் றன்னைச்
சங்கராயார் கொலோ சதுரா
ரந்தமொன்றில்லா வானந்தம் பெற்றே
னியாது நீ பெற்றதொன் றென்பாற்
சிந்தையே கோயில்கொண்ட வெம் பெருமான்
றிருப்பெருந் துறையுறை சிவனே
யெந்தையே யீசா வுடலிடங் கொண்ட
யானிதற் கிலனோர் கைம்மாறே.

இதன்றிச் சிதம்பர முனிவர் பதம்பாவிய சிதம்பர புராணத்தில் இராமலிங்க சுவாமிகள் ஆசிரியப்பா அருமையாலும் மற்றும் சிதம்பரமுனிவர் சபேசமூர்த்தியின் காப்பாலும் பின் வருவதால் நன்கு விளங்கும் :—

நீர் தாங்கும் பார்தாங்கு நெடுமாலு
மலரயனு நிரத்து போற்ற
வார்தாங்கு புளகமிகு களபமுலை
மலைவனிதை மகிழ்ந்து காணத்
தார்தாங்கு சடாமவுலி நிலவெற்றிப்
பொதுவினடந் தயங்கா நிற்குஞ்
சீர்தாங்கு வேதாந்த நாதாந்தப்
பாஞ்சுடரைச் சிந்தை செய்வாம்.

உருவமொரு நாலாகி யுருவருவத்
திருவுருவ மொன்றே யாகி
யருவமொரு நாலாகியப் பாலா
யப்பாலு மளவிடாத பொருவிகந்த

வுயிர்க டொறும் புணராமற்
புணர்ந்தருளே பொழிந் தெல்லோர்க்குங்
கருதரிய திருச்சிற்றம்பலத் திலகும்
பேரொளியைக் கருத்துள் வைப்பாம்.

அருமறையின் சிரத்தொரளியா
யனந்தமாய்ப் பூரணமா யசலமாகி
யொரு முதலா யுண்மையா யுணர்வாகி
யானந்த வுருவமாகி
யிருமல மற்றிருப்போர்கள் ளிருப்பாகி
மணி மன்றுளென்று ஞானத்
திருமகிழ நின்றருளுஞ் சிதம்பரத்தை
யெந்நாளுஞ் சிந்தை செய்வாம்.

செல்வர் சிவபுரத்தினுள்ளார் சிவனடிக்கீழ் பல்லோரும் உய்யும்பொருட்டே மேலாகிய சாதனசதுட்டய சம்பத்துகளை அடைவதற்கு வழியாகிய முதல் நூல்.

உள்ளத்திருந்து மொளித்தான் பரன் குரவன்
கள்ளந்தனைத் தவிர்த்துக் காட்டினன் — வள்ள
லருவான கோலமே வக்கோலங் காட்டுங்
குருவான கோலமோ கூறு.

அஞ்ஞானத்தால் மூடப்பட்டு விரிந்திருக்கின்ற பேரிருள் பொருந்திய மித்தையாம் வடிவாகிய உடலென்னும் வீட்டின்கண் உறக்கஞ்செய்யாமல் உண்மையென்னும் மாணிக்க ஒளி வடிவாகிய குருமூர்த்தியின் சந்நிதானத்தில் அருளோடு கூடிய பரையைக் கண்டு சிவவெளி வியாபகத்திற் சதா நிர்விகற்பமாய் நின்று சொல்லாலளப்பரியா நிலையில் நிற்பவனே நித்யானந்தன். சாந்த மனமென்னும் ஆனந்த கிரியின்மேற் சென்

றேறி பரிபூரணமான ஞானசிவ விளக்கத்தை எய்து வனெவனோ அவனே சம்பூரணனென்றும், சதாசிவனென் றுங் கூறுவர். அத்துவித முத்தியளித்த குருநாதன் ஊமைமணிபோல் ஒடுங்கிச் சிவமான தூமனத்தார்க் கின்னூற் சுகங்கொடுக்குமென்னும் வாய்மையை அறிந்த நம் வள்ளற் பெருமான் அருட்பெருஞ் சோதி சித்தர் சித்திபுரத்தரசன் உத்தர ஞான சிதம்பர உண்மை புணர்ந்தோனாகிய சிதம்பரம் இராமலிங்க சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய திருவாக்கால் திருவாசகச் சிறப் பும் நம் வாதவூரர் பெருமையும் அணியணியாகப் பின் வருஞ் செய்யுட்களா லொரு சிறிதுந் தடையின்றி உணரக்கூடும்.

வான்கலந்த மாணிக்கவாசக நின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கானற் கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
ஊன்கலந்து வுயிர்கலந்து வுவட்டாம லினிப்பதுவே.

கருவெளிக்குட் புறனாகிக்கரண மெலாங்கடந்து நின்ற
பெருவெளிக்கு நெடுங்காலம் பித்தாகித் திரிகின்றோர்
குருவெளிக்கே நின்றுழலக்கோதறநீ கலந்ததனி
யுருவெளிக்கே மறைபுகழு முயர்வாத வூர்மணியே.

வாட்டமில்லா மாணிக்கவாசக நின் வாசகத்தைக்
கேட்டபொழு தங்கிருந்த கீழ்ப்பறவைச் சாதிகளும்
வேட்டமுறும் பொல்லா விலங்குகளு மெய்ஞ்ஞான
நாட்டமுறு மென்னிலங்கு நானடைதல் வியப்பன்றே.

## சிவம்

அகண்ட பரிபூரண சுயம்பிரகாச வடிவமாகிய தனி முதற் கடவுளே சிவம். விந்துநாத கலாதீத சகரவொற்று நடுவில் இகரமுடன் கூடி உருவநிலை வகித்து சர்வ

சக்திகளைப்பெற்ற வகாமுடன் கூடி (வல்லபையுடன்) இறுதியில் மகரவொற்றாகிய ஆனந்த சொரூபம் வகித்துப் பதி என்கிற நாமம் பதிந்திருப்பதே சிவத்தினிலக்கணம். ஜீவக்காணக் காட்சியால் அறுதியில் மலமில்லாதவனாகியும் உள்ள சிவம் அகமாகிய ஆன்ம காட்சியால் வெளிதோன்றி வெளியே ஒளி வடிவமாகி ஆன்ம அறிவென்கிற பேதரகித சிவபரம் பொருளெனத் தெளிந்து நின்ற காட்சியே அற்புதக்காட்சியென்றும் ஆன்மக்காட்சி யென்றும் சிவநிலை யென்றும் திருக்கு திரிசிய மற்றதென்றும் சாமான்ய விசேடணங்கட்கு அதிஷ்டானமாகவும் உபாதானமாகவுமுள்ளதே, சச்சிதானந்த மென்றும் பரிபூரணமென்றும் அறிஞர் கூறுவர். சுத்த சன்மார்க்க சோபானங்களில் விளங்குஞ் சுகத்தனி வெளி யெனுமத்தகைய சிற்சபை அருட்பெருஞ்சோதி. கடவுள் பிந்துநாத இறுதியில் விளங்குவர். பிந்துவென்பது சூரியப் பிரகாசத்தை யொத்தது. நாதம் சப்தவடிவமாகக் காற்றில் லயப்படுவது. ஆகையால் நமது தந்தையர் காற்றுருவோ கனலுருவோ கடவுளுருவென்பார் வேற்றுருவால் மயங்காதீர் என்னும் வார்த்தையில் வயப்பட்டு வழிபடு மார்க்கமாகிய சச்சிதானந்த நிலையே பரைவெளி வியாபகத்தில் தத்த முறைப்பால் வழிகாட்டுவதும் பிறகு அநுபவ உறைப்பால் சோமசூரியப் பிரகாஸமாகிய சாகாத்தலை வேகாக்கால் என்னும் விளக்கத்தை அடைவர். வேதாந்த சித்தாந்த நாதாந்த யோகாந்த போதாந்த கலாந்த மென்னும் ஷடாந்த சமரச நன்னிலையே ஞானமென்னும் பரவெளி நடனமாகிய சிற்சபா தரிசனத்தைத் தனியருள் உண்மை நிலையால் “தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கமென்னும்” பூர்வோத்தரார்த்தத்தை அடைவர்.

"ஆறுகோடியாஞ் சமயங்கள் அகத்தினு மவைமேல்
வீறு சேர்ந்தசித் தாந்தவே தாந்தநா தாந்தந்
தேறும் மற்றைய அந்தத்தும் சிவமொன்றே யன்றி
வேறு கண்டிலேன் கண்டிரேற் பெரியர்காள் விளம்பீர்"

என்னும் நமது திருவருட் பிரகாஸ தந்தையார் திருவாக்
காற் காண்க. இங்ஙனம் மகா வாக்ய சுத்தானுபவத்தில்
நிகழும் முப்பதமான தத்பத தொம்பத அசிபத இயல்
பால் மகாவாக்ய லக்ஷியார்த்தங்களே அன்பின் மீக்காற்
றோன்றும் அருளே திருமேனியாக வெழுந்தருளிய நம்
அருளாசிரியனே சிவமெனக் கொள்க. அருளாசிரிய
னென்பது சொன்ன சொல்லைத் தன் மனத்தில் நிறுத்தி
அனுபவிக்கிறவன். மற்று பொருளாசிரியன் சொல்லைச்
சொல்லுகிறவன். இங்ஙனம் வாச்சியார்த்த லக்ஷ்யத்தில்
பரையிலுதித்த வநுபவமே தத்பதமெனவும் பரிக்கிரக
சக்தியிற்றோன்றியது தொம்பதமெனவும் சர்வசாந்தியில்
நின்ற இரண்டற்ற அநுபவத்திலதாவது ஆதியாகிய
பெண் அனுதியாகிய சிவத்துடன் கூடுங்காலை நிகழ்ந்த
விடம் ஆனந்தம். இவ்வானந்தமே சிவமெனவறிக.

தொம்பதந் தற்பதந்தோன்று மசிபத
நம்பிய சீவன் பரஞ்சிவனும் நிற்கு
மம்பதமேலைச் சொரூபமா வாக்கியஞ்
செம்பொரு ளாண்டருள் சீர் நந்திதானே

அணுவும் பரமும் சித்தேய்ந்து
கணுவொன்றிலாத சிவமும் கலந்தா
லிணையறுபால் தேனமு தெனவின்பத்
துணையறு வாயுரை யற்றிடத் தோன்றுமே.

— திருமந்திரம்.

வெட்டவெளி தன்னை மெய்யென்றிருக்கும் சுவானு பூதி நிலைமை யுடையவர்கள் சிவமென்றறிக. நித்திரை கெட்டு நினைவோடிருப்போர்க்கு முத்திரையின்றி மோன வடிவமாய் இருத்தலே சிவமென்றறிக. அலைகடலாகிய அல்லலை நீக்கி அறிவோடிருப்பார்க்கு எல்லையற்ற இன்பமே சிவம். தன்னை அறிந்து தலைவனைச் சேர்ந்தோர்க்கு முப்பதத்துக்குமேல் முடிவாகி முளைத்த மெய்யனுபவமே துரிய நிலையென்றுஞ் சோதி சிவம் என்றும் நமது அருட்பெருஞ்சோதித் தந்தையர் கூறிப் போந்ததை மறந்தோமில்லை. இதைத் தாயுமான சுவாமிகள் ஆனந்தக் களிப்பாற் காண்க :—

சங்கர சங்கர சங்கர சம்பு - சிவ
சங்கர சங்கர சங்கர சம்பு
ஆதியனாதியுமாகி - எனக்கானந்தமாய்
அறிவாய் நின்றிலங்குஞ் சோதி

மவுனியாய்த் தோன்றி - அவன்
சொல்லாத வார்த்தையைச் சொன்னாண்டி தோழி. ()

சொன்னசொல் லேதென்று சொல்வேன்
என்னை - சூதாய்த்தனிக்கவே சும்மாவிருத்தி
முன்னிலை யேதுமில்லாதே - சுக - முற்றச் செய்தே
யெனைப்பற்றிக் கொண்டாண்டி. (சங்கர)

பற்றிய பற்றற வுள்ளே
தன்னைப்-பற்றச் சொன்னான் பற்றிப் பார்த்தவிடத்தே
பெற்றதையே தென்று சொல்வேன் - சற்றும்
பேசாத காரியம் பேசினான் தோழி. (சங்கர)

— ஆனந்தக்களிப்பு

சித்தம்மௌனம் செயல் வாக்கெலா மவுனஞ்
சுத்த மவுனமென் பாற்றோன்றிற் பராபரமே.

என்னுடலு மென்னுயிரு மென்பொருளு

உன்னிடைநான் கொடுத்தனன்மற் றென்னிடைவே
றொன்றுமிலையுடையா யிங்கே
புன்னிகரேன் குற்றமெலாம் பொறுத்ததுவும்
போதாமற் புணர்ந்துகொண்டே
தன்னிகரின் றனைவைத்தா யிஞ்ஞான்றென்
கொடுப்பேனின் றன்மைக்கந்தோ.

கோது கொடுத்த மனச்சிறியேன்
குற்றங்குணமாக் கொண்டேயிப்
போது கொடுத்த நின்னருளாம்
பொருளை நினைக்கும்போதெல்லாம்
தாதுகொடுத்த பெருங்களிப்புஞ்
சாலாதென்றால் சாமிநினக்
கேது கொடுப்பேன் கேட்பதன்
முன்னெல்லாம் கொடுக்கவல்லாயே.

— திருவருட்பா

திருச்சிற்றம்பலம்

Printed at the Aurora Press, Madras — 1926.

# OPINIONS ON "THE SPIRITUAL LIGHT IN ARUTPA"

Mr. T. Sambasivam, my beloved brother in the Lord Sivam, is a great student and devotee of the wellknown Initiate Chidambaram Ramalinga Swamigal who flourished during the second and third quarters of the last century. His life, example, and works are a source of inspiration to many of us, southerners. His universal love (including the animal creation), his simple and melodious language, his unparalleled devotion to the Supreme Universal Parent, and his catholic unsectarianism are not surpassed by any of the saints of the Tamil land. I am so glad that Mr. T. Sambasivam, who has steeped himself, mind and soul, in the flood of Ramalinga Swamiji's works and who is therefore eminently fitted to propagate the doctrines of the Swami among the public, has brought out this book and I am quite sure that it will lift its readers from worldly selfish thoughts into that devotional spiritual atmosphere, the breathing of which continuously and without interruption is the *summum bonum* of human life as exemplified in Saint Ramalingaswami.

"The Glimpses of the Real" which is one of the chapters in this valuable book appropriately introduces the essential cosmopolitan and universal religion advocated in the teachings of the Great Seer-saint.

Moryalaya,
Royapettah,
22—12—1922.

SIR. T. SADASIVIER, Kt.,

*Rtd. Judge, High Court, Madras.*

(2) It is scarcely necessary for me to do more than to endorse what my beloved brother Sir. T. Sadasivier has stated above. In my present very feeble state of health, I content myself with the above few words and trust and pray this work of love "The Spiritual Light in Arutpa" by my Mr. T. Sambasivam may find large circulation and extend the beneficial influence which is calculated to produce.

Guindy House, 12—8—23. } DR. SIR. S. SUBRAHMANIA IYER, Kt., C.I.E., *Retired Acting Chief Judge, High Court, Madras.*

(3) The age of saints has not passed away. Men of profound piety and spiritual insight and with the gift of poetry are still to be found in this country though their names are known only to limited circles in this land of many tongues. Any attempt to make their teachings more widely known and extend their influence through the medium of English must be welcomed. Mr. T. Sambasivam's work on "Spiritual Light in Arutpa" which is intended to popularize the teaching of Ramalingaswamigal, a holy man of the South Arcot District famous for his devotional poetry is a praiseworthy undertaking.

Mylapore, *2nd September 1923.* } SIR. P. S. SIVASWAMI AIYER, K.C.S.I., C.I.E., M.L.A.

propagating the great doctrines of Arutpa. Further, I am proud to say that my friend Mr. T. Sambasiva Mudaliar has formed an association with some of his friends called Ramalinga Swamigal Samarasa Sanmarga Annadhana Samajam of which he is the originator and Secretary and has almost completed a building to locate the said Samajam at Thiruvothiyur after the model of Vadalur. Towards the cost of it he has given all the sale-proceeds of his publications.

The present publication, "The Spiritual Light in Arutpa" in English contains four Chapters, viz., (1) the Glimpses of the Real, (2) His practical teachings, (3) His Spiritual teachings combined with devotional songs and (4) Mahadevan; I am sure whoever happens to read his works cannot fail to have a nobler and pious life in future. I know Mr. Mudaliar for a very long time and his scholarly writing about the greatness of Swami Ramalingam of Chidambaram and his Arutpa will I trust and pray, command a great influence to the Eastern world.

Madras,<br>1—8—23.

S. SOMASUNDARAM PILLAY,<br>B.A., B.L., M.L.C.,<br>*Hony. Editor, Dravidan, Madras.*

(5) Mr. T. Sambasiva Mudaliar in addition to the gift of the Book "Arutprakasam" already made by him to the Samajam and in addition to the many ways in which he has been of great service to the Samajam as its Secretary is bringing out a new book "Arutjothi" spoken of highly by competent persons as a useful and well-meant religious book, the proceeds of which he is willing to give to the Samajam for feeding the poor on Delhi Durbar Day every year.

I need hardly say I am delighted at the idea and have much pleasure in accepting the offer.

Madras,<br>24—9—1915.

P. M. SIVANGNANA MUDR., BA.,B.L.,<br>*President.*